# அச்சம் அறியாத ஜெயன்



‘கோவிலக்கம்’ என்ற மலையாளப் படத்தின் படப்பிடிப்பு சென்னை அருகே உள்ள சோழவரத்தில் நடந்தது. அந்தப் படப்பிடிப்பில் பங்கு கொண்ட மலையாள நடிகர் ஜெயன் விபத்தின் காரணமாக உயிரிழந்தார். அந்தப் படத்தில் அவருக்கு ஜோடியாக நடிக்கும் **கமலதா** கூறுகிறார்:

அன்று எனக்கு இந்தப் படத்தின் ஷூட்டிங் இல்லை. விபத்து நடந்த அன்று காலை அந்தப் படக் கம்பெனியின் டிரைவர் சென்னையில் உள்ள ஒரு ஹோட்டலின் முன்பு ஜீப், கார் மோதல் விபத்தில் உயிரிழந்திருக்கிறார். அது நடந்த பிறகும் அவர்கள் படப்பிடிப்பை வைத்துக் கொண்டு சோழவரம் போயிருக்கிறார்கள். இந்தப் படம் பல பெரிய நடிகர் நடிகைகள் நடிப்பது. மது, கே. ஆர். விஜயா, உம்மர், சோமன், ஜெயன், சுகுமாரன், சுகுமாரி, பாலன் கே. நாயர் ஆகியோர் நடிக்கிறார்கள். ஹிந்திப் படமான 'வக்த்' தான் 'கோவிலக்கம்'. ராஜ்குமார் பாத்திரத்தில் ஜெயன் நடிக்க சுனில்தத் வேடத்தில் சோமன் நடிக்கிறார். இவர்கள் இருவருமே என்னைக் காதலிப்பது போல் கதை.

திரைப்பட உலகில் ஜெயனைப் போல் உண்மையான நண்பர்களைப் பார்ப்பது அரிது. உண்மையான நட்புள்ளத்தோடு, பிரதிபலனை எதிர்பார்க்காமல் பழகுபவர். என் வீட்டுக்கு ஒரிரு முறை வந்திருக்கிறார். அவருக்கு பிரெட் புட்டிங் என்றால் மிகவும்பிடிக்கும். ஒருமுறை அவர் வந்தபோது அதைக் கொடுத்து நாங்கள் உபசரிக்கவும் அன்றிலிருந்து அவர் என்று என்னைப் பார்த்தாலும் ''பிரெட் புட்டிங் என்றைக்கு என்று சொல்லிவிடுங்கள் சாப்பிட வந்துவிடுகிறேன்'' என்று சிரித்துக் கொண்டே சொல்வார்.

இதற்கு முன் அவரை நான் சந்தித்தது 'மூர்கன்' என்ற மலையாளப் படத்தின் படப்பிடிப்பின்போதுதான். அதில் நான் சிறு கௌரவ வேடத்தில் நடிக்கிறேன். எனக்கு ஒரே ஒரு நாள்தான் படப்பிடிப்பு. அந்தப் படம் இந்தப் பேட்டி பிரசுரமாவதற்குள் வெளியாகியிருக்கும். இந்தப் படத்தில் அவரின் ஆக்ரோஷமானஅதே சமயம் அழகான சண்டைக் காட்சிகளைக் காணலாம். டூப் போட்டுக்கொள்ள இவருக்கு என்றுமே பிடிக்காது. எதையும் நானே செய்கிறேன் என்பார். நமது ஒப்புதலுக்குக் கூடக் காத்திராமல் செய்யத் தொடங்கி விடுவார். தடாவிலிருந்து 25 மைல் உள்ளே சென்றால் அடர்ந்த காட்டினிடையே ஒரு நீர்வீழ்ச்சி இருக்கிறது. காரில் நெருங்க முடியாது. ஜீப்பில்தான் போக வேண்டும். ஒரு சிறு குளத்தில் நான் இறங்கி நிற்பது போல் காட்சி. அங்கிருப்பவர்கள் எல்லோருமே ''ரொம்ப தூரம் மையத்தை நோக்கிப் போகாதீர்கள்; பயங்கரமான ஆழம்'' என்று எச்சரித்தனர். தண்ணீர் என்றாலே நடுங்கும் நான் ஆழமென்று சொல்லிவிட்டால் சும்மா இருப்பேனா? கரை ஏறியே தீரவேண்டும் என்று பிடிவாதம் பிடிக்க ஆரம்பித்தேன். அன்று இவருக்குப் படப் பிடிப்பே கிடையாது. ஆனாலும் எனக்காகத் தண்ணீருக்குள் இறங்கி நான் நிற்கும் இடத்துக்கு அருகில் நின்று ''பயப்படாமல் நடி. ஏதாவது ஆபத்து வந்தால் நான் காப்பாற்றுகிறேன்'' என்று கூறினார்.

நடிப்புத் தொழிலில் ஓய்வு பெற்ற பிறகு ஆன்ம அமைதி தரும் ஆசிரமம் ஒன்றை நடத்த வேண்டும் என்பது இவரது ஆசை.

**ஐ. வி. சசி:** விபத்துக்களுக்கும் ஜெயனுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டு. 'மீன்' என்ற படத்தில் நடிப்பதற்காகக் குளத்தில் மூழ்கி நடிக்க வேண்டும். குளத்துக்குள் மூழ்கிவிட்டார். ஐந்து நிமிஷம் பத்து நிமிஷமாயிற்று. ஆளையே காணோம். ஆட்கள் இறங்கித் தேடத் தொடங்கினார்கள். 150 அடி ஆழமுள்ள குளம். திடுமென்று எப்படியோ மேலே மிதந்து வந்துவிட்டார். அவருக்குச் சிகிச்சை அளித்தோம். பிழைத்தார். 'அங்காடி' என்ற படத்தின் ஒரு காட்சியில் எரியும் நெருப்பினுள்ளே இருந்து நடிக்க வேண்டும். நாலு பக்கமும் ஜ்வாலையுடன் நெருப்பு எரிந்து கொண்டிருக்கிறது. ''ஐயோ!'' என்ற சத்தம் கேட்டது. இவரைக் காணவில்லை. பிறகு பார்த்தால் ஒரு மூலையில் மயங்கிக் கிடந்தார். உடனே சிகிச்சை அளித்துக் காப்பாற்றினோம். மூன்றாவதாக சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்து கிளம்பி வரும்போது இவர் காருடன் ஒரு லாரி மோதி கார் அப்பளமாகிவிட்டது. அதிலும் இவர் எப்படியோ தப்பிவிட்டார். எங்களுக்கெல்லாம் ஒரே ஆச்சரியம். சரி, இத்தனை விபத்துக்களிலிருந்து தப்பியதால் இவருக்கு ஆயுள் கெட்டி என்றுதான் அனைவரும் நம்பினோம். ஆனால் காலன் எங்களை ஏமாற்றி அவரை அழைத்துச் சென்று விட்டான். பேட்டி: ''சலன்''

# Kalki Shopping Page

SPECIALISTS IN

Quartz, Electronic, Omega, Rolex, Rado, Seiko, Citizen, HMT, Etc




SERVICE ONLY

**Sri Jagadeswari Electronic Service Centre**

17, Ramanathan Street,
T. Nagar, Madras-600 017
(Near Mambalam Railway Station)



**EBE**

Dealers for

Ganesh Fan, Allwyn TV, Fridges, Standard TV, Telerama TV, etc., Empire Radio, Transistor and Two-in-one, Cookers, Master Clocks, Ruby Wet Grinder, Moulimex, Steel Furnitures etc.

**EVER BRIGHT ENTERPRISES**

19, Perambur
Barracks Road,
Madras – 600012
Phone: 663416

**கனகதாரா**

மோதிரம்-டாலர்

V.P.P. மூலம் அனுப்பி வைக்கப்படும்

சக்தி ஜி. சம்பந்தன்

# எல்லா வயதினருக்கும் எல்லா தேவைகளுக்கும் கைத்தறி!

**கோ-ஆப்டெக்ஸ்** கைத்தறி

கோ - ஆப்டெக்ஸ் விற்பனை நிலையம்
32, பாரதிசாலை, திருவல்லிக்கேணி
சென்னை - 600 005
அருகில் உள்ள
விற்பனை நிலையங்களுக்கு
வருகை தாரீர்!

# ஆரோவில்லுக்கு ஓர் அவசரச் சட்டம்!





M.P.-ஜான்.





திரு பி. ஆர். பரமேஸ்வரன்

ஸ்ரீ அரவிந்த மகரிஷியின் கருத்தில் உதித்து அன்னையின் முயற்சியால் உருவான சர்வதேச கிராமமான ஆரோவில் தனது ஆன்மிக மதிப்பை இழந்து சர்ச்சைகளுக்கு இடமளித்து விட்டது.

உலகெங்கிலும் பரவிக் கிடக்கும் ஸ்ரீ அரவிந்தரின் சீடர்கள் தேசம், மொழி, மதம் ஆகிய பாகுபாடுகள் இன்றி அரவிந்த ஆசிரமத்தின் அருகிலேயே வந்து தங்கி வாழ் நாளை ஆன்மீகத் துறையில் ஈடுபடுத்த வேண்டும் என்று விரும்பியதன் பயனாய் 'அன்னை'யின் எண்ணத்தில் உதித்தது இத் திட்டம். 'Unesco'வின் ஆதரவையும் அச் சர்வதேச ஸ்தாபனத்தின் நிதி உதவியையும் பெற்று உருவாகத் தொடங்கியது.

முடிவு பெறும் நிலையில் கிராமத்தின் மதிப்பு சுமார் 1000 கோடி ரூபாயாக இருக்கும்.

உலகத்தின் பல நாடுகளும் தாமாக முன்வந்து நிதியுதவி செய்தன. அரவிந்த சொஸைட்டியின் நிர்வாகத்தில் 'ஆரோவில்' கிராமம் வளரத் தொடங்கியது. பல நாட்டு அரவிந்த பக்தர்களும் குடிசைகள் கட்டிக் கொண்டு இங்கு வந்து குடியேறி இக்கிராமத்தை நிர்மாணிப்பதில் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டனர்.

அன்னை இருந்தவரை எவ்விதப் பிரச்னைகளும் இல்லாமல் சிறப்பாக வளர்ந்து கொண்டிருந்த இப்புனிதத் திட்டத்தில் அன்னையின் மறைவுக்குப் பின் சோதனைகள்.

ஆரோவில் கிராமத்தில் வாழும் அன்னிய நாட்டைச் சேர்ந்தவர்களுக்கும், ஆரோவில் கிராமத்தை நிர்வகிக்கும் பொறுப்பாளர்களான அரவிந்த சொஸைட்டி நிர்வாகிகளுக்கு மிடையே திடீர் திடீரென்று மோதல்கள், கைகலப்பு; அடிதடி; ஒருவரை ஒருவர் துரத்தித் துரத்திச் சண்டையிடும் காட்சிகள் போலீஸ் வரவேண்டிய நிலை!

இச்சமயத்தில்தான் மத்திய அரசின் அவசரச் சட்டம் சில தினங்களுக்கு முன் பிறந்தது. அலகாபாத் உயர்நீதி மன்றத்தின் முன்னாள் நீதிபதியான எல். பி. நிகாம் 'ஆரோவில்' கிராமத்தின் முழு நேர நிர்வாகியாக இருப்பார் என்று அரசு ஆணை கூறியது.

நிலைமையை நேரில் காண ஆரோவில் கிராமத்துக்குப் போயிருந்தேன். பல நூறு ஏக்கருக்கு மேலான நிலப் பரப்பில் படர்ந்து தரிசாகவும், விளையும் நிலமாகவும் இருக்கும் இக்கிராமத்தில் எண்பது சதவீதம் பரப்பு தமிழ் நாட்டு எல்லைக்குள் உள்ளது. மீதி பாண்டிச்சேரி யூனியன் பிரதேசத்தில்.

பாண்டிச்சேரியிலிருந்து சுமார் 15 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது இக்கிராமம். பாண்டிச்சேரியிலிருந்து நேரடியான போக்கு வரத்து வசதி கிடையாது. நான் சென்ற தினம் பொருத்த மழை. ஓர் ஆட்டோவில் போனேன். குறுகலான பாதை. செம்மண்ணும் சகதியுமான குழம்பு. குடலைப் புரட்டி எடுக்கும் மேடு பள்ளங்கள். மனித வாசனையே சுற்றுப்புறத்தில் இல்லாத ஓர் அமானுஷ்ய சூழ்நிலை. முந்திரி மரங்கள்.

இவற்றைத் தாண்டினால் நிறைவு பெறாத கட்டிடங்களாய், அன்னை ஆலயம், அரங்கம், உணவுச் சாலை ஆகியவற்றுடன் ஆரோவில்

பல லட்சம் ரூபாய் செலவில் ஏராள மான உழைப்பைக் கொண்டு உருவான இவை சென்ற எட்டாண்டுகளாக அரை குறையாகவே நிற்கின்றன என்கிற செய்தி வேதனையைத் தருகிறது.

மழையைச் சிறிதும் பொருட்படுத்தாமல் சிறுவர்களும் பெரியவர்களுமாக மேல் நாட்டுக்காரர்கள் சிலர் கால் பந்து ஆடிக்கொண்டிருக்கின்றனர்.

மேலே சென்றால் குடிசை போன்ற தோற்றத்தில் மிக வசதியான குடியிருப்புக்கள்,

''ஆரோவில் அரசு நிர்வாகத்தை ஏற்கும் அளவுக்கு வந்துள்ளதே இதற்குக் காரணம் என்ன?'' என்று இங்கு வாழும் ஒருவரைக் கேட்டபோது, தன்னை ரட் (Ruud) என்று அறிமுகப்படுத்திக்கொண்ட அந்த ஹாலந்துக்காரர் பின் வருமாறு கூறினர்: ''இங்கு தற்போது இருபது நாடுகளைச் சேர்ந்த சுமார் 500 பேர்கள் வாழ்கிறோம். இந்தியர்களும் உண்டு. நாங்கள் ஸ்ரீ அரவிந்தரின் பக்தர்கள். அன்னை எங்கள் வழிபாட்டுக்கு உரியவர். இக்கிராமத்தை நிர்மாணித்தது எங்களது உழைப்புத்தான். அவரவர் நாட்டிலிருந்து இப்பணிக்காக ஏராளமாக நிதி உதவியும் வருகிறது. ஆனாலும் இதன் நிர்வாகப் பொறுப்பு அரவிந்த சொஸைடியிடம் உள்ளது. அன்னை இருந்தவரையில் நிர்வாகம் சிறப்பாக இருந்தது. தற்போது நிர்வாகத்தில் ஏராளமான குறைகள், ஓட்டைகள்! சுட்டிக் காட்டினால் எங்கள் மீது அவதூறை அள்ளித் தெளிக்கின்றனர். எங்களை இங்கிருந்து வெளியேற்றவும் முயல்கின்றனர். எனவே நிர்வாகம் எங்களிடம் இருக்க வேண்டும் என்பது எங்கள் வாதம். மத்திய அரசு தலையிட்டு நிலைமையைச் சீர்படுத்த வேண்டும் என்று நாங்கள் விண்ணப்பித்திருந்தோம். இதற்குச் செவிமடுத்து மத்திய அரசு நிர்வாகப் பொறுப்பைத் தற்போது ஏற்றுள்ளது வரவேற்கத் தக்கது.''

ஸ்ரீ அரவிந்த சொஸைடியினர் என்ன கூறுகிறார்கள் என்று கேட்கப் போனபோது, அவர்களது சேர்மன் திரு நவ்ஜாதா இல்லாத நிலைமையில் ஒரு பொறுப்பு வாய்ந்த பிரதிநிதி நிலைமையை விளக்கினர்:

''அன்னையின் முயற்சியினால் உருவானது ஆரோவில் கிராமம். இங்கிருப்பவர்கள் ஸ்ரீ அரவிந்தரின் பக்தர்களாக இருக்கவேண்டும். ஆரோவில்லில் குடியேறும் அயல் நாட்டினரின் நன்னடத்தைக்கு மத்திய அரசிடம் அரவிந்த சொஸைடி உத்தரவாதம் அளிப்பதன் பேரில்தான் அவர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள். ஆரோவில் நிர்மாணிக்க மத்திய அரசு 90 லட்சம் உதவியது. மொத்தச் செலவில் 5 சதவீதம் மேல் நாட்டு ஸ்தாபனங்களின் நிதி உதவியும் உண்டு. ஆயின் இதற்குப் பல மடங்கு அதிகமாகப் பணம் போட்டு நிர்மாணித்தது அரவிந்த சொஸைடிதான்! இங்கு வசிப்பவர்கள் அரவிந்தரின் பக்தர்கள், அரவிந்த சொஸைடியால் உத்தரவாதம் அளிக்கப்பட்டு வாழ்பவர்கள் என்பதால்தான் பல நாட்டு நிதி உதவியும் வருகிறது. As Vatican is to Italy we want Auroville to India என்று இவர்கள் இன்று புதிதாகக் குரல் எழுப்புகின்றனர். இது எப்படி சாத்தியமாகும்?

''ஆரோவில் கிராமத்தில் வசிப்பவர்களில் பெரும்பாலோர் நியாய உணர்வுக்குக் கட்டுப்பட்ட நல்லவர்கள். அரவிந்த சொஸைட்டியின் உத்தரவாதம் இல்லாமல் அரசியல் செல்வாக்கு காரணமாய், நேரடியாக மத்திய அரசின் விசா பெற்றுச் சென்ற இரண்டாண்டுக்குள் இங்கு குடியிருக்கத் தொடங்கிய சிலரது போதனையால்தான் கலகங்கள் தோன்றியுள்ளன. தற்போது தார்மிக உணர்வுக்கும், ஆன்மிக நெறிக்கும் புறம்பான செயல்கள் ஆரோவில்லில் நடப்பதற்கும் இந்தச் சிலரே காரணம். இத்தகையவர்களை அவர்கள் நாட்டுக்குத் திருப்பி அனுப்பக் கோரி நாங்கள் கொடுத்த மனுக்களை மத்திய அரசு ஏற்றுக்கொள்ளவில்லை. தமிழக அரசு எங்கள் கூற்றில் உள்ள நியாயத்தை உணர்ந்து உதவியாக இருந்தும் நிலைமை சீர்ப்படவில்லை.

'' 'கணக்கு வழக்கு சரியில்லை. பணம் கையாடப்படுகிறது' என்று பொய்ப்பிரசாரம் செய்கின்றனர். ஏற்கனவே அரசால் தணிக்கை செய்யப்பட்ட கணக்குகள் இவை. சி.பி.ஐ. உட்பட எந்தப் பிரிவு வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் மறு தணிக்கை செய்து கொள்ளட்டும். அதைச் செய்யாமல் ஆன்மிக ஸ்தாபனமான ஆரோவில்லை அரசு ஓர் அவசர ஆணையால் ஏற்றது அடிப்படை உரிமையைப் பறிப்பதாக நாங்கள் கருதுகிறோம்.''

பாண்டிச்சேரி 'பாண்டெக்ஸ்' கம்பெனியில் தொழிலக நிர்வாகி திரு பி. ஆர். பரமேசுவரனைச் சந்தித்தபோது அவர் சொன்னது:

''இரு தரப்பினரிடையேயும் கருத்து வேறுபாடு என்று வந்தான பிறகு யாராவது நடுவில் புகுந்து நிலைமையைச் சீர்ப்படுத்த வேண்டியது அவசியமாகிறது. இதனை மத்திய அரசைத் தவிர வேறு யாரால் செய்ய முடியும்? நிர்வாகத்தை மத்திய அரசு ஏற்றது சரியாகத்தான் எனக்குப் படுகிறது''

பாண்டிச்சேரியிலிருந்து வெளிவரும் ஒரே பத்திரிகையான 'New Times observer' என்ற ஆங்கில வார இதழின் ஆசிரியர் திரு எம். பி. ஜான் சொன்னது:

''மத்திய அரசின் குறுக்கீடு அவசியமானதுதான். ஆனால் அரசு ஏற்ற முறை சரியில்லை. ஓர் ஆன்மிக நிறுவனத்தை அரசு நேரடியாக நிர்வகிக்கச் சட்டத்தில் இடம் இல்லை. கோவில்களை இந்து அறநிலையப் பாதுகாப்பு இலாகா மூலம் தர்மகர்த்தாக்களை நியமித்து நிர்வகிப்பது போன்று மத்திய அரசு டிரஸ்டிகளை நியமித்து நிர்வகிப்பதுதான் சரியாக இருக்கும். காலப் போக்கில் அரசு இதைச் செய்யும் என எதிர்பார்க்கிறேன்.''

- பி. ரங்கநாயகி

புகைப்படம் : மன்னைமூர்த்தி

---

''தடங்கலுக்கு வருந்துகிறவர்கள்' பட்டியலில் இன்னும் சிலர் சேரப் போறாங்க...!''

''என்னடா சொல்றே...?''

''கூடிய விரைவில் மதுரையில் ரேடியோ நிலையமும், டி.வி. நிலையமும் அமைக்கப் போறதைத்தான் சொல்றேன்...!'' -விளாத்துக்கடவு ரவி



# நெடுங்காலமாக உபயோகித்தாலும், கேடு ஒன்றுமில்லை

## அவருடைய நைலான் மீன்வலைகள் உறுதியானவை, நீடித்து உழைப்பவை — அவரைப் போலவே இயற்கைச் சக்திகளை எதிர்த்து சமாளிப்பவை

இயற்கையின் தீங்கிழைக்கும் சக்திகளை எதிர்த்து தினந்தோறும் விடியற் காலையில் ஆரம்பமாகிறது மீனவரின் அன்றைய கடினப் போர்.

வெற்றி என்பது அபூர்வம். தன் வாழ்க்கைக்கு வேண்டியதை சம்பாதிக்க ஒவ்வொரு நாளும் தன் உயிரையே பணயம் வைத்து மீன் பிடிக்கிறார்.

ஆனால் இப்பொழுது... ஸ்ரீராம் ஃபைபர்ஸ் தயாரிக்கும் குதிரை மார்க் டஃப்லான் நைலான் மீன்வலை நூலினால் பின்னப்பட்ட அவருடைய மீன்வலைகள் மிக உறுதியாய் இருக்கின்றன. கடல்நீர் மற்றும் கடுமையான வெய்யிலினால் ஏற்படும் கேடுகளை சமாளிக்கின்றன.

இனி அவர் குவியல் குவியலாய் மீன் பிடிப்பது நிச்சயமே!



**ஸ்ரீ ராம் ஃபைபர்ஸ் லிட்**

நைலான் மீன்வலை நூல், நைலான் டயர் கார்ட் மற்றும் நைலான் மோல்டிங் பவுடர் தயாரிப்போர்.

OBM 6536 TM


நாயனார்
கேரள
கூட்டணி
அரசு
காங்கிரஸ் (இ).
காங்கிரஸ் (அ)
மார்க்சிஸ்ட் மோதல்


எப்படி அந்த ரௌடியைத்
துரத்தி துரத்தி
அமுக்கிறேன்..
பாத்தீங்களா?
கலவரங்களை
அடக்க
யோசனைகள்
திட்டங்கள்


பல்லவன்
முத்து சாமி
அந்த சாமி வரம்
கொடுத்துடிச்சு!
இந்த சாமி...
பால் வள நிறுவ
சாமி

# விஸ்டய்க்காய்

**மா**ண்புமிகு வி. வி. சுக்லா அவர்களுக்கு, வணக்கம்.

விலைவாசிகள் விஷம்போல் ஏறுகின்றனவே என்ற கவலை எங்களுக்கு மட்டுமில்லை உங்களுக்கும் இருக்கிறது என்று காட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நன்றி! நன்றி! விலை உயர்வைத் தடுக்க அத்தியாவசியப் பண்டங்களின் மொத்த வியாபாரத்தை அரசு தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவேண்டும் என்றும் தனியாரை ஒழித்துக் கட்டி விநியோகத்தைக் கூட்டுறவு சங்கங்கள் மூலம் நடத்த வேண்டும் என்றும் அரசின் கொள்கையை விளக்கியிருக்கிறீர்கள். சந்தோஷம். தங்கள் மதிநுட்பத்தை வாழ்த்துகிறோம்.

அமைச்சர் அவர்களே; எங்களுக்கு ரேஷன் கால அனுபவங்கள் இன்னும் அடியோடு மறந்து போகவில்லை. உணவுடன் கல்லையும் களிமண்ணையும் சேர்த்து உண்டவர்கள் நாங்கள். அந்த அனுபவம் எங்களுக்கு எதிர்காலத்திலும் கை கொடுக்கும். எனவே நீங்கள் கவலையின்றிச் செயல்படலாம். அதே நேரத்தில் நீங்கள் கொள்கைகளை அமுல்படுத்தும்போது மறக்காமல் செய்யவேண்டிய சில காரியங்களையும் நினைவூட்ட விரும்புகிறோம்.

முதலாவதாக ''விஸ்டய்க்காய்'' என்ற நிறுவனத்தைத் தோற்றுவிக்கவும். வேறொன்றுமில்லை, Whole Sale Trade in Essential Commodities Corporation of India என்பதன் சுருக்கம்தான் WSTIECCOI. இந்நிறுவனத்துக்குப் பல கோடி மூலதனம் தேவை. மக்களின் வரிப்பணம் எதற்கு இருக்கிறது? ஏற்கெனவே மொத்த வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் தனியாருக்கு நஷ்ட ஈடு கொடுக்க நேரலாம். இதற்குத் தேவைப்படும் சில கோடிகளை ஆர். வி. யிடம் கூறிப் புதிதாக வரி விதித்துப் பெற்றுக் கொள்ளவும். கொடுப்பதற்கு நாங்கள் இருக்கிறோம்.

விஸ்டய்க்காயில் பணியாற்ற சேர்மன் முதல் பியூன்கள் வரை பல்லாயிரக் கணக்கான அதிகாரிகளையும் ஊழியர்களையும் நியமிக்கவேண்டும். இவர்களுக்குச் சம்பளம் தருவதோடு நில்லாமல், காரியாலயக் கட்டிடங்கள் உருவாக்க வேண்டும். அதில் ஏர்கண்டிஷனர்களை நிறுவவேண்டும். மேஜை நாற்காலிகள், கம்பளங்கள், படுதாக்கள் எல்லாவற்றுக்கும் ஆர்டர் கொடுக்கவேண்டும். இவர்களின் வீட்டு வசதிகளையும் மறவாமல், கவனிக்கவும். அப்புறம் காரியாலயம் வந்து போக, உத்யோகத்துக்கு ஏற்ப கார்களும் ஸ்கூட்டர்களும் ஏற்பாடு செய்யவும். இதற்கெல்லாம் பணம் போதவில்லை என்றால் கவலை வேண்டாம்; நாஸிக் அச்சுக்கூடம் எதற்கு இருக்கிறது? இயந்திரத்தைச் சற்று வேகமாக முடுக்கினால் நோட்டுக்களை அச்சடித்துத் தள்ளிவிட்டுப் போகிறது!

வியாபாரப் பண்டங்களை ஏற்றிச் செல்ல, விநியோகிக்க லாரிகள் தேவை. தனியார் லாரிகளை நம்பமுடியாது. விஸ்டய்க்காய்க்கே சொந்தமாக ஏராளமான லாரிகளை வாங்கி விடுங்கள். அவற்றை நிறுத்திவைக்க ஷெட்டுகள் கட்டுங்கள். டீஸல் பங்குகளை உருவாக்குங்கள். கலப்பை முதல் கடுகுவரை அத்தியாவசியப் பண்டங்கள் அனைத்தையும் சேமித்து வைக்கப் பிரும்மாண்டமான கிடங்குகளைக் கட்டுங்கள்.

இப்படி மிகப் பெரிய அளவில் அரசு மொத்த வியாபாரத்தில் புகுந்தாலும் கள்ள மார்கெட் என்னவோ ஒழியாது. எனவே ''கள்ள மார்க்கெட் கண்காணிப்பு இலாக்கா'' ஒன்று ஏற்படுத்துங்கள். ரிடயரான உயர் போலீஸ்

1980 நவம்பர் 30

ரௌத்திரி கார்த்திகை 15

மலர் 39 : இதழ் : 18



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

அதிகாரிகள் பலருக்கு அதில் வேலை கொடுங்கள். அவர்களுக்குத் தேவையான உதவியாளர்களை நியமித்து, காரியாலயக் கட்டிடங்கள், கார்கள் முதலியவற்றையும் கொடுங்கள்.

எங்கேயாவது பஞ்சம் என்றால் உடனே விஸ்டய்க்காய் மீது தான் பழி சுமத்துவார்கள், எனவே யாரும் 'பஞ்சம்' என்று மூச்சு விடுவதற்கு முன்பாக நீங்கள் ஸ்தலத்துக்குப் பறந்து சென்று பார்த்து, ''பஞ்சமில்லை வீண் புரளி'' என்று அறிக்கை விட வசதியாக விஸ்டய்க்காய்க்குச் சொந்தமான ஒரு ஹெலிகாப்டர் தேவைதான். வாங்கி விடுங்கள்.

திடீரென்று விஸ்டய்க்காய் ஊழியர்கள் நாடு தழுவிய போராட்டமும் வேலைநிறுத்தமும் செய்வார்கள். பரவாயில்லை, நாங்கள் வயிற்றில் ஈரத்துணி போட்டுக் கொள்கிறோம்.

இத்தனை முயற்சிகளை நீங்கள் மேற்கொண்ட பிறகும் விலைவாசி மேலும் உயரும், நிச்சயம்! என்றாலும் எங்களுக்கு ஒரு திருப்தி. விலைவாசி உயர்வால் லாபமடைவது தனி முதலாளிகள் அல்லவே; விலைவாசிகள் உயர்ந்தும் கூட நஷ்டமடைவது எங்களுடைய ஜனநாயக சோஷலிஸ அரசுதானே என்று மனம் மகிழ்வோம். விஸ்டய்க்காய்க்கு ஏற்பட்ட நஷ்டத்தை ஈடுகட்ட மேலும் வரி கொடுக்கத் தயாராவோம்.

ஒன்றுமட்டும் செய்து விடாதீர்கள். விலை உயர்வைச் சமாளிக்கச் சிறந்த வழி உற்பத்தியை அதிகரிப்பதுதான் என்று அசட்டுத்தனமாய்ச் செயல்பட்டு விடாதீர்கள்! அப்புறம் இத்தனை பாடுபட்டு எழுதிய இந்தத் தலையங்கமே அர்த்தமற்றதாகிவிடும்!

## வம்பன் வெங்கு

தமயந்தி

கேரள முதல்வரை டில்லியிலே கேரோ பண்ணினாங்களாமே?



தப்பு, ரொம்பத் தப்பு! அதைவிடப் பெரிய தப்பு....



மாட்டுப் பெண் உடைச்சால் பொன்குடம்கிற மாதிரி அவர் தந்த விளக்கம்!



தொழிற் சங்க ரீதியா கேரோ பண்ணினால் தப்பு இல்லையாம், அரசியல் ரீதியா கூடாது என்கிறார்!



கேரளாவிலே தீவிரமா ஆரம்பிச்ச இந்த வழக்கம் கேரள முதல்வரையே தாக்கிடுத்து!



ஹூம்! பஸ்மாசுரன் கதைதான் ஞாபகம் வரது!



தேவிபாரடைஸ் • கிரௌன் • அனுராகா

மற்றும் தென்னாடெங்கும்

# வறுமையின் நிறம் சிவப்பு

கலர்





# வெந்து தணிந்த காடுகள்

## 4

ராதிகா வீட்டுக்குச் சென்றபோது மணி ஒன்பது. அவளும் அருணும் சபர்வாலா வீட்டுக்குச் சென்று, அவருடன் பேசி முடிப்பதற்குள் நேரமாகி விட்டது.

சபர்வாலா அவர்களைக் கண்டதும் விஸ்கி பாட்டிலை எடுத்தார். அருண் முதலில் தயங்கினான்; ஆனால் காரியம் நடந்தாக வேண்டும். அவர் வழக்கப்படி ராதிகாவிடம் தம்முடைய கிரிக்கெட் திறமையைப் பற்றிச் சொல்லத் தொடங்கி விட்டார். அவர் என்ன செய்ய வேண்டும் என்று நடு நடுவே அருண் சொன்னவற்றையும் அவர் காதில் போட்டுக் கொண்டார். அடுத்த மாதம் அவர் ஐரோப்பா செல்ல விரும்பினால், அதற்கான ஏற்பாடுகளை தனது கம்பெனி செய்யும் என்பதை அருண் தெரிவித்தபோது, அதுவும் இயல்பாக நடக்க வேண்டிய ஒன்றுதான் என்பது போல் புன்னகையுடன் இந்த யோசனையை ஆமோதித்தார். காரியம் நடந்தேறி விட்டது என்று ராதிகா உணர்ந்தாள்.

அவள் வீட்டுக்குச் சென்றபோது ராகுல் ஹாலில உட்கார்ந்து கொண்டு ஏதோ ஒரு புத்தகம் படித்துக் கொண்டிருந்தான.

''ஹல்லோ ராகுல்....

''ஹல்லோ...

அவன் புத்தகத்தினின்றும் தன் பார்வையை மீட்கவில்லை

அவள் தன் அறைக்குச் சென்று, உடை மாற்றிக் கொண்டு ஹாலுக்கு வந்தாள்.

''நீ சாப்பிட்டாயா''

''ஹூம்...''

''அப்பா?''

''தெரியாது....''

அப்பொழுது அர்ஜுன் உள் பக்கத்திலிருந்து வந்தான்.

''சாஹேப் இன்னும் வரவில்லே.''

இச்செய்தி அவளுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. ரமேஷ் சாதாரணமாக ஆறு மணிக்கெல்லாம் வந்து விடுவான். அவனுக்கு நண்பர்கள் என்று யாரும் இல்லை. சினிமாவுக்குப் போகும் பழக்கமும் கிடையாது. ஏன் இன்னும் வரவில்லை?—

''சரி... நான் சாப்பிடுகிறேன், அர்ஜுன்''

ராகுல் எழுந்து தன் அறைக்குச் சென்றான்.

ரமேஷ் எங்கே போயிருப்பான்? அவன் வீட்டுக்குத் தாமதமாக வருவதென்பதுதான் இதுவரை நடந்து வந்திருக்கிறது. இப்பொழுது ரமேஷ் இன்னும் வரவில்லை என்பது அவ்வீட்டு மரபை மீறிய நிகழ்ச்சி.

''சாஹேப் போன் செய்தாரா?'' என்று கேட்டாள் ராதிகா.

''இல்லே'' என்றான் அர்ஜுன்.

அவள் சாப்பிட்டு முடித்தபிறகு ராகுலின் அறைக்குச் சென்றாள்.

அவன் கட்டிலில் படுத்துக் கொண்டு, கையிலிருந்த புத்தகத்தில் ஆழ்ந்திருந்தான்.

''அப்பா இன்னும் வரலேங்கிறது உனக்கு ஆச்சரியமா இல்லே?''

''இல்லே.''

அவள் கட்டிலில் உட்கார்ந்தாள்.

''எங்கே போயிருப்பார்?''

''ஹௌ டு ஐ நோ?''

'ஏன் கேள்வி கேட்டு என் பிராணனை வாங்குகிறாய்?' என்ற அலுப்பு குரலில் தெரிந்தது.

ராதிகா எழுந்து தன் அறைக்குச் சென்றாள்.

ரமேஷ் இன்னும் வரவில்லை என்பதா, இல்லாவிட்டால் நியதி, நெறி பிறழ்ந்து விட்டது என்பதா, எது அவள் மனத்தை உறுத்துகிறது என்று அவளுக்கு நிச்சயமாகத் தெரியவில்லை.

கட்டிலில் படுத்ததும் அவளுக்குத் தூக்கம் வந்து விட்டது.

திடீரென்று அவளுக்கு விழிப்பு வந்தது.

### இந்திரா பார்த்தசாரதி

இப்பொழுது என்ன மணி இருக்கும்?

அவள் அருகிலிருந்த 'ட்ரெஸ்ஸிங் டேபி'ளில் வைத்திருந்த கடிகாரத்தைப் பார்த்தாள். மணி ஐந்து.

அப்பொழுது அவளை இன்னொரு நினைவு தாக்கியது. ரமேஷ் இன்னும் வரவில்லை!...

தாமதமாக வந்து ஒருவேளை ஹாலில் படுத்துக் கொண்டிருப்பானோ?

அவள் கட்டிலை விட்டு இறங்கி ஹாலுக்குள் சென்று விளக்கைப் போட்டாள்.

ஹால் ஓரமாகப் படுத்துக் கொண்டிருந்த ஒரு கறுப்புப் பூனை சிலிர்த்துக் கொண்டு எழுந்து எந்தப் பக்கம் ஓடலாம் என்று யோசித்தது. ஓரிரண்டு விநாடிகள் சிந்தித்த பிறகு அவளைத் தாண்டி அது வேகமாக ஓடியது.

அவள் சோபாவில் உட்கார்ந்தாள்.

ரமேஷ் எங்கே போயிருக்கக் கூடும்? ஏதாவது 'ஆக்ஸிடெண்ட்' ஏற்பட்டிருந்தால்?— ரமேஷ் நிதானமாகத்தான் கார் ஓட்டுவது வழக்கம். தில்லியில் சாலை விதிகளை அனுசரிக்கின்றவர்களுக்குத்தான் விபத்து ஏற்படுகின்றது. அப்படி ஏற்பட்டிருந்தால், இதற்குள் நிச்சயம் செய்தி வந்திருக்கும்...

விபத்து என்று அவள் ஏன் நினைக்க வேண்டும்? பழைய சிநேகிதன் ய[illegible]ரயாவது

பார்த்திருக்கலாம்; அவன் வீட்டுக்குச் சென்று அதைக் கொண்டாடப் போய், அங்கேயே படுத்திருந்தானானல்?... அவளால் இதை நினைத்துப் பார்க்க முடியவில்லை. ரமேஷ் சுபாவத்துக்கு, இது பொருந்தி வருவதாக அவளுக்குப் படவில்லை. நண்பர்களே இல்லாமல் எப்படி இருக்க முடியுமென்று அவனைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் அவள் யோசிப்பதுண்டு. ராகுலும் இந்த விஷயத்தில் அப்பா மாதிரி இருக்கிறானே என்பதுதான் அவள் வருத்தம்.

அவள் ஆஃபீஸ் விருந்தென்றால் வீட்டுக்கு வரும்போது மணி பன்னிரண்டாகி விடும். ஆனால் ரமேஷ் ஒரு தடவை கூட அவள் ஏன் தாமதமாக வந்தாள் என்று கேட்டதில்லை. ஆரம்பத்தில் வற்புறுத்தி ஓரிரண்டு விருந்துகளுக்கு அழைத்துச் சென்றாள். அதற்குப் பிறகு அவன் வர மறுத்து விட்டான். அவன் அவளோடு பேசினால் அல்லவா மற்றவர்களுடன் பேசுவதற்கு? வந்திருந்த அந்த ஓரிரண்டு விருந்துகளின் போதும் யாருடனும் பேசவில்லை. அவளுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது..

அவன் அவள் விஷயங்களில் குறுக்கிடுவதில்லை; இப்பொழுது அவள் மட்டும் அவன் ஏன் இன்னும் வரவில்லை என்று ஏன் யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்?

அவள் அருணிடத்தில் நேற்று சொன்னாள்: ''நான் எனக்காக வாழ்கிறேன். மற்றவர்களுக்காக, நான் வாழ விரும்புகிற முறையை மாற்றி அமைத்துக் கொள்ள முயலவில்லை.... ரமேஷ் ஆட்சேபித்திருந்தால், நாங்கள் இருவரும் என்றோ பிரிந்திருப்போம்...''

அவ்வாறு சொன்னவள், ரமேஷ் இன்னும் வரவில்லையே என்று ஏன் சிந்திக்க வேண்டும்?—ரமேஷிடத்தில் அவளுக்கு உணர்ச்சி பூர்வமான பிணைப்பு இருக்கிறது என்று அர்த்தமா?

இந்த நினைவு வந்ததும் அவள் முகத்தில் புன்னகை தோன்றிற்று. 'இட் ஈஸ் ரெடிகுலஸ் ஈவன் டு திங்க்... என்று தனக்குத்



தானே சொல்லிக் கொண்டாள். கண்ணுக்குத் தெரிந்த ஒரு பாதையைத் தவிர, வேறு பாதையே கிடையாது என்று தீவிரமாக நம்பும் ரமேஷிடம் அவளுக்கு எப்படி உணர்ச்சி பூர்வமான பிணைப்பு இருக்க முடியும்?—

விம்மிக்கு அருணிடம் உணர்ச்சி பூர்வமான பிணைப்பு இருக்குமா? — அதைப் பற்றி அவள் எதற்காக இப்பொழுது கவலைப்பட வேண்டும்? 'உன் அபிப்பிராயத்தைப் பற்றி எனக்கொண்ணும் தெரியாது. தெரிஞ்சுக்கணும்கிற ஆசையும் இல்லே. ஆனா என் பொண்டாட்டியைப் பத்தி ஆபீஸ்லே விவாதிக்க நான் தயாராயில்லே...' எவ்வளவு கர்வம், உதாசீனம்....! அவனுடன் அவள் விம்மியைப் பற்றி விவாதித்திருக்கக் கூடாது.

ராதிகாவுக்குத் தன் அழகைப் பற்றிய நிச்சயமான பிரக்ஞை உண்டு. தன் அறிவும் மட்டுமல்ல; அழகும் அவளுடைய முன்னேற்றத்துக்குக் காரணம் என்பதையும் அவள் உணர்ந்தவள்தான். ஆனால் இந்த அழகு அருணை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை என்பது அவன் அடிக்கடி சொல்வது போல், அவன் தனக்குத் தானே விதித்துக் கொண்ட கட்டுப்பாட்டின் காரணமாகவா?—

அருணுக்கு ஃபோன் செய்தால் என்ன? ரமேஷ் இன்னும் வரவில்லை என்று வேறு யாரிடம் சொல்வது?

அவள் எழுந்து ஃபோனருகே சென்றாள்.

சிறிது நேரம் ஃபோன் அடித்துக்கொண்டே இருந்தது.

''எஸ்....'' அருணின் குரல். ராதிகாவுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''ராதிகா பேசறேன்... வந்து....''

''மை காட்! என்ன ஆச்சரியம்!''

''எனக்கும் ஆச்சரியமாகத்தான் இருக்கு. விம்மிதான் ஃபோனை எடுப்பான்னு நினைச்சேன்....''

''விம்மி கிட்டே பேசணுமா?''

''அப்படி இல்லே... நீங்க இவ்வளவு சீக்கிரம் எழுந்து வருவீங்கன்னு எதிர்பார்க்கலே... தி பாய்ண்ட் ஈஸ்... ரமேஷைக் காணோம்....''

''வாட் டு யு மீன்?''

''நேத்து ஆபீஸ் போனவர் இன்னும் வரல்லே...''

---

அவர் : ''நான் செய்த ஐடியாவினால் இப்பவெல்லாம் என் வீட்டுக்கு ஒருத்தர்கூட ஒசி டி.வி. பார்க்க வர்றதில்லே!''

இவர் : ''என்ன செய்தீங்க அப்படி..?''

அவர் : ''டி.வி. ரிப்பேர் நிதி என்று எழுதப்பட்ட உண்டியலை ஒசி டி.வி. பார்க்க வந்தவர்களின் முன் நீட்டிக் குலுக்கினேன்...''

- உ. ராஜாஜி




''வரலியா... என்ன ஆச்சு?''

''அதான் எனக்கும் புரியலே... இது ரொம்ப அன் யூஷுவலா இருக்கு...''

''அவருடைய ஃப்ரெண்ட் யார் வீட்டிலியாவது... மே பி ஹி ஹாட் ஒன் டு மெனி..''

''அப்படி அவர் போகக் கூடிய ப்ரெண்ட்ஸ் யாரும் கிடையாது... அவர் குடிக்கிற வழக்கமுமில்லே... அருண், யு நோ ஹிம்.''

சிறிது நேரம் மௌனம்.

பிறகு கேட்டான்: ''ஆக்ஸிடெண்டா இருக்குமோன்னு பயப்படறியா?''

''ஐ டோண்ட் நோ...''

''சரி... நான் அங்கே இப்போ வரேன். என்ன செய்யலாம்னு யோசிப்போம்....''

அவளுக்கு மற்றோர் ஆச்சரியம். அவளுடைய வீட்டுப் பிரச்னையில் அக்கறை கொண்டு உதவி செய்ய வருகிறேன் என்கிறான்.....

''தாங்க் யு... அருண்....''

ராகுல் அவள் ஃபோனில் பேசுவதைப் பார்த்துக் கொண்டு நின்றான்.

''குட் மார்னிங், ராகுல்....''

''அப்பா இன்னும் வரலியா?''

''இல்லே....''

அவன் ஒன்றும் பேசாமல் சிறிது நேரம் ஏதோ சிரித்தபடி நின்றான். பிறகு கேட்டான்: ''நான் ஸ்கூலுக்குப் போகலாமில்லையா?''

''ஏன்?... எதுக்காக இந்தக் கேள்வி கேக்கறே?''

''சும்மாத்தான் கேட்டேன்.''

அவன் போய்விட்டான்.

அவன் எதற்காக இந்தக் கேள்வி கேட்டான்? இதன் அர்த்தம் என்ன?

ராகுல் ஏன் இப்படி இருக்கிறான்? சிறு வயதிலிருந்தே வீட்டில் தனிமையைத் தவிர வேறொன்றும் அறியாத பையன் வேறு எப்படி இருக்க முடியும்?

அவளும் அப்படித்தான் வளர்ந்திருந்திருக்கிறாள். அப்பா ஒரு பேராசிரியர். அம்மா முதலில் ஏதோ ஓர் அரசியல் கட்சியில் இருந்துவிட்டு பிறகு சமூக சேவகியாகி, பிறகு ஞானோதயம் ஏற்பட்டதாகச் சொல்லி ஒரு மடத்தில் சேர்ந்து, அப்புறம் அவளைப் பற்றி தகவலே இல்லாமல் போய்ச் சேர்ந்து விட்டாள். அப்பாவுக்கு அவருண்டு, அவர் புத்தகங்கள் உண்டு... இவற்றைத் தாண்டிய உலகங்களை அவர் ஏறிட்டும் நோக்கவில்லை. அவளுக்குப் பதினெட்டு வயதானதும் படிப்பில் 'கெட்டிக்காரப் பையன்' ரமேஷுக்கு அவளைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டு மறுபடியும் தம்முடைய புத்தக உலகில் சரண் புகுந்து விட்டார். அவள் அப்பொழுது திருமணம் செய்து கொள்ள மறுத்ததையும் அவர் காது கொடுத்துக் கேட்கவில்லை. தம் 'கடமை' தீர்ந்து விட்டதென்று சந்தோஷம் தான் அவருக்கு.

ஆனால் வீட்டில் அவள் அநுபவித்த தனிமை, சமூகத்திலிருந்து ஒதுங்கி வாழும் படியாக அவளைச் செய்துவிடவில்லை. எல்லோருடைய கவனத்தையும் தான் ஈர்க்க வேண்டும் என்ற ஆசையைத்தான் தூண்டியது. ரமேஷ் அவளுடைய ஆசைக்குத் தடையாக எப்பொழுதும் இருந்ததேயில்லை.

சொல்லப் போனால், அவன் அவளுடன் எதைப் பற்றியும் விவாதித்ததே கிடையாது. கணவன்—மனைவிக்கு இடையே சாதாரணமாக ஏற்படக் கூடிய சிறு சிறு சண்டைகள், சமாதானங்கள் எதுவுமே இல்லாத வாழ்க்கை. ஆனால் இதை 'நிம்மதியான வாழ்க்கை' என்று சொல்ல முடியுமா? அமைதி சுடுகாட்டிலும் இருக்கலாம், சொர்க்கத்திலும் இருக்கலாம்...

''காப்பி கொண்டு வரட்டுமா?'' — அர்ஜுன்.

''சாஹேப் நேற்று எத்தனை மணிக்கு ஆஃபீஸுக்குப் போனார்?''

''வழக்கம் போலத்தான்.''

''ஏதாவது சொன்னாரா?''

''இல்லே...'' என்று சொல்லும்போது அவன் குரலில் ஒரு தயக்கம் தெரிந்தது.

''அவர் போகும்போது ஏதாவது உனக்கு வேறுபாடாகத் தோன்றியிருந்தால் சொல்லேன்...''

''வழக்கத்தை விட அவர் கையில் கொண்டு போன பெட்டி சற்று பெரிதாக இருந்தது.''

''ஊருக்குப் போகிற மாதிரியா?''

''இருக்கலாம்.''

''சரி... நான் பல் விலக்கிவிட்டுக் காப்பி குடிக்க வருகிறேன். ராகுல் என்ன செய்கிறான்?''

''பள்ளிக்கூடத்துக்குப் புறப்படுகிறமாதிரி தெரியறது.''

அவள் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு வரும்போது ராகுல் 'ப்ரெட்-டை'ச் சுவைத்தவாறு தினசரித் தாளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனுக்கருகில் உட்கார்ந்தாள் ராதிகா.

''அப்பா நேத்துக் கொண்டு போன பெட்டி பெரிசா இருந்ததுங்கறான் அர்ஜுன்.''

ராகுல் மௌனமாக இருந்தான்.

''ஊருக்குப் போயிருப்பாரோ?... அதுவும் சொல்லாம, கொள்ளாமே.... ஐ டோண்ட் அண்டர்ஸ்டாண்ட்...''

ராகுல் தினசரித் தாளைப் புரட்டினான்.

அர்ஜுன் அவளிடம் காப்பிக் கோப்பையைக் கொண்டு வந்து நீட்டினான்.

''நீ வீட்டை விட்டு எங்கும் போகவில்லையே? ஏதாவது ஃபோன் வந்திருந்தால்...''

''போகவில்லே... மெம் சா(ஹ)ப்...''

அர்ஜுன் அவள் வேறு ஏதாவது கேட்கக் கூடுமென்று சிறிது நேரம் அங்கேயே நின்று கொண்டிருந்தான்.

''சரி... நீ போ......''

''ஆல் ஸ்டேல் நியூஸ்....'' என்று சொல்லிக்கொண்டே தினசரித் தாளை வீசி எறிந்தான் ராகுல்.

''அப்பா இன்னும் திரும்பி வரலியே, அதுதான் நியூஸ்...'' என்றாள் ராதிகா.

''ஒருவேளை நீ திரும்பி வராமெயிருந்தா அது நியூஸா இருந்திருக்கலாம்... பட்... அப்பா... ஐ டோண்ட் நோ'' என்று சொல்லி விட்டுத் தோள்களைக் குலுக்கிக் கொண்டே ராகுல் எழுந்து சென்றான்.

அவள் எழுந்து அவன் அறையை நோக்கிச் சென்றாள்.

''ராகுல். நீ எதுக்கு அப்படிச்சொன்னே?''



''பரீட்சையில் 'பிட்' அடித்துக் கொண்டிருந்த மாணவனுக்கு அருகில் சூப்பர்வைஸர் வந்ததும் மாணவனுக்கு நடுக்கம் கண்டது. 'Why you look a ''bit'' nervous!' என்று சூப்பர்வைஸர் சொன்னதும் அவனுக்கு மயக்கமே வந்துவிட்டது! -கிணத்துக்கடவு ரவி

அவன் அவள் பக்கம் திரும்பிப் பார்க்காமல், பள்ளிக்கூடம் போக ஆயத்தமாகிக் கொண்டிருந்தான்.

''ராகுல்... ஐ ஆம் ஆஸ்கிங் யு எ கொஸ்ச்சின்.''

அவன் அலமாரியைத் திறந்து'கோட்'டை எடுத்துப் போட்டுக் கொண்டான். கண்ணாடி எதிரில் 'டை'யைச் சரிசெய்தான்.

''ராகுல்... நீ என் பொறுமையைச் சோதிக்கிறே...''

''நான் என்ன சொல்லணும்கிறே?''

''நீ எதுக்காக அப்படிச் சொன்னே?''

''அப்பா ஒருகலர்லெஸ் பர்ஸன். அண்ட் ஐ ஹேட் ஹிம்...''

''அப்பாவைப் பத்தி இப்படிப் பேசலாமா?''

ராகுல் புன்னகை செய்தான்.

''எதுக்குச் சிரிக்கிறே?''

''எனக்கு ஆச்சரியமா இருக்கு... எப்போ உனக்கு அப்பா பேரிலே இவ்வளவு மரியாதையும் மதிப்பும் வந்ததுன்னு.... நீ என்ன சொல்றேன்னு உனக்கே புரியறதா?''

''டோண்ட் பாதர் அபௌட் மீ... ரமேஷ் உன்னுடைய அப்பா... அவரைப் பற்றி நீ இப்படிப் பேசக் கூடாது...''

ராகுலின் முகம் சிவந்தது. அவன் கையிலிருந்த புத்தகங்களை வீசி எறிந்தான். அவனை அப்பொழுது பார்க்க ராதிகாவுக்குப் பயமாக இருந்தது.

அவன் அவளிடமிருந்து விலகிச் சற்றுத் தூரத்தில் போய் நின்று கொண்டான்.

''நான் ஒண்ணு சொல்லட்டுமா? யு மே நாட் லைக் இட்...'' என்றான் ராகுல்.

''என்ன?''

''அப்பா என்கிட்டே ஒண்ணு சொன்னார். அது உண்மையா இல்லையான்னு எனக்குத் தெரியாது. பட் அன்னிலேந்து, அவர்கிட்டே எனக்கு இருக்கவேண்டிய மரியாதை, மதிப்பு எல்லாம் போயிடுத்து... ஹி ஈஸ் எ கவர்ட்... ஒரு பயந்தாங்கொள்ளியைப் போய் அப்பான்னு சொல்லிக்க எனக்கு வெட்கமா இருக்கு....''

''என்ன சொன்னார்?''

'' 'ரமேஷ் உன் அப்பா'ன்னு சொன்னியே, அதைப் பத்தி அவருக்கே சந்தேகம்....''

ராதிகாவின் கன்னத்தில் யாரோ 'பளீ'ரென்று அறைவது போலிருந்தது. இந்த அதிர்ச்சியின் வேகம் தாங்காமல் அவள் நாற்காலியில் உட்கார்ந்தாள். (தொடரும்)

# கோணங்கள்

லட்சுமி ரமணன்

குளித்துவிட்டுப் புடவையை உடுத்திக் கொண்டு துவாலையால் தலையைத் துவட்டிய வண்ணம் குளியலறையிலிருந்து சாந்தா வெளியே வந்தபோது, கூடத்தில் அவள் மாமியார் சீதாலக்ஷ்மி யாருடனே உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தது கேட்டது.

''என்ன செய்யறது போயும் போயும் ராஜேந்திரனுக்கு இந்த மாதிரி இடத்துலே போய் விழணும்னு தலையில் எழுதி இருந்தது. எத்தனையோ ஜட்ஜும் மந்திரியும் பெண்ணைக் குடுக்கிறேன்னு போட்டி போட்டுண்டு வந்து வாசல்லே க்யூவிலே நின்னு. எல்லாத்துக்கும் ப்ராப்தம் வேண்டாமோ?''

பிள்ளைக்குக் கல்யாணமாகி ஐந்து வருடங்களாகி மூன்று வயதில் பேரன் கூட இருக்கிறான். இன்னமுமா தன் மாமியாருக்குத் தனக்குப் பதில் மந்திரியின் பெண்ணொருத்தி நாட்டுப் பெண்ணாக வரவில்லை என்கிற குறை? அவள் கணவன் ராஜேந்திரனுக்கும் அப்படியொரு குறை இருக்குமோ? இல்லாவிட்டால் கூட அம்மாக்காரி சொல்லிச் சொல்லியே அந்தப் பள்ளத்தை மனசில் தோண்டி விடுவாள். சே... என்ன மனிதர்கள் இவர்கள்... சீதாலக்ஷ்மி மூச்சு வாங்கத் தொடர்ந்தாள்.

''அது எப்படியோ போச்சு. இப்போ என் நாட்டுப் பொண்ணோட சின்னத் தங்கை எல்லார் தலையிலேயும் பெரிய கல்லாத் தூக்கிப் போட்டுட்டா. கேட்கும்போதே நாக்கைப் பிடுங்கிக்கலாம் போல் இருக்கும். என் சம்பந்தி ஓடிப்போன பொண்ணு இங்கே வந்திருக்காளோன்னு தேடிண்டு வந்தார். விவஸ்தை கெட்டவர்....''

''அப்படியா எந்த ஜாதிக்காரன்?....'' ஓர் ஆண் குரல் கேட்டது.

''எல்லாம் நம்ம ஜாதிதான். என் அதிலென்ன விசேஷம்?''

சாந்தா மெல்ல எட்டிப் பார்த்தாள். தன் குடும்ப விஷயங்களை மாமியார் யாரோடு அத்தனை சரளமாகப் பகிர்ந்து விமரிசிக்கிறார் என்று தெரிந்து கொள்ளும் ஆவல் அவள் மனத்தில் தலையெடுத்தது.

அங்கே உட்கார்ந்திருந்த புரோகிதரைக் கண்டதும் அவள் கண்களில் குபுக்கென்று வெள்ளம் பாய்ந்தது.

'நாக்கைப் பிடுங்கிக் கொள்ளுகிற நல்ல காரியத்தை அவள் உண்மையிலேயே செய்தால் கூடத் தேவலை என்று சாந்தாவுக்குத் தோன்றியது.

சம்பந்தி வீட்டு விஷயங்களை இப்படி வெளிப்படையாக அலசாமல் இருப்பாள் அல்லவா?

அதற்கு மேலும் அங்கு நிற்கப் பிடிக்காதவளாய்த் தன் வேலைகளைக் கவனிக்கத் துவங்கினாள்.

தன் மாமியார் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் அவள் மனத்தில் ஈட்டியாகப் பாய்ந்து குத்திப் பதிந்தன. அவள் தங்கை சாரு செய்தது தவறான காரியம்தான். வயசான காலத்தில் தாய் தகப்பனாருக்குத் தீராத அதிர்ச்சியையும் பழியையும் ஏற்படுத்தும் வகையில் சொல்லாமல் வீட்டைவிட்டு ஓடியிருக்கவேண்டாம். ஆனால் அதற்கு சாந்தாவோ அல்லது அவள் பெற்றோர்களோ எப்படிப்பொறுப்பாக முடியும் என்பது அவளுக்குப் புரியவில்லை. இவ்வளவுக்கும் அவளது குடும்பம் ஆசார அனுஷ்டானங்களில் ஊறிப் போனது. அவள் தாய் அந்த வீட்டு வாசற்படியைத் தாண்டி எங்கும் போனது கிடையாது. பூஜை, புனஸ்காரம், பண்டிகை எல்லாம் கிரமமாகக் கொண்டாடுவார்கள். மார்கழி மாதம் வந்தால் வாசலில் தெருவை அடைத்துக் கோலம் கோட்டுப் பரங்கிப் பூவை அழகுக்குச் செருகி வைப்பதற்குள்ளேயே அம்மாவின் முதுகு ஒடிந்துவிடும். அந்த வீட்டுப் பெண்கள் வயது வந்த ஆண்களை ஏறிட்டு முகம் பார்த்துப் பேசுகிற வழக்கம் கூடக் கிடையாது. படித்து வேலைக்குப்போனபோது கூட சாந்தா குனிந்த தலை நிமிர்ந்தது கிடையாது. சாருவும் அப்படி இருந்தவள்தான். திடீரென்று அத்தனை விஷயங்களும் எப்படி நடந்துவிட்டன என்பது புரியவில்லை. சாதிப் பிரச்னை குறுக்கிடவில்லை என்றால் அவள் தந்தை பேசாமல் அவர்கள் திருமணத்தைநடத்தி வைத்திருக்கலாமே. ஏன் அவர் அப்படிச் செய்யவில்லை? அவள் தந்தை சாருவைத் தேடிக் கொண்டு அங்கே வந்தபோது அவள் கேட்கத்தான் நினைத்தாள். அவள் மாமியார் அவரைக் கேள்வியால் துளைத்து அடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்ததும் தானும் எதையாவது கேட்டு அவர் மனத்தை நோகடிக்கக் கூடாது என்று சாந்தாவுக்குத் தோன்றிவிட்டது. ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் பிறந்த வீட்டுக்குப் போய்த் தன் தாயுடன் இருக்க வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள். அவளுடைய கண்ணீரைப் பரிவுடன் துடைத்து ஆறுதல் வார்த்தை சொல்லித் தேற்றி முறிந்துபோன அவள் மனசுக்கு மருந்தாக இருக்க வேண்டும் என்று விரும்பினாள். ராஜேந்திரனைக் கேட்டபோது அவன் ''அம்மா பர்மிஷன் கொடுத்தால் போயேன்'' என்று பட்டுக் கொள்ளாமல் பதில் கூறினான்.

அம்மா என்ன சொல்லுவாள் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தும் அப்படிச் சொன்னான். 'நான் உங்களைக் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறேனா இல்லை உங்கள் அம்மாவையா?' என்று கேட்டுவிட வேண்டும்போல் சாந்தாவுக்கு இருந்தது. அவள் கஷ்டப்பட்டுத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். மனசில் தோன்றியதையெல்லாம் ஓர் ஆணைப் போல் பெண்ணானவள் வெளியே பேசிவிட முடியாது, பேசவும் கூடாது. அந்தச் சகிப்புத் தன்மை, கட்டுப்பாடு இவைதான் பெண்ணை ஆணின் அடிப்படைக்

குணத்தினின்றும் இனம் பிரித்துக் காட்டுகிறதோ?

அவள் சினிமா போக வேண்டும் என்றால் அம்மாவைக் கேட்க வேண்டும். புடவை வாங்கிக்கொள்ள அம்மாவைக் கேட்க வேண்டும்.... அம்மாவைப் போல் உண்மையிலேயே பிரியத்தை வருஷிக்கக் கூடியவளானால் கேட்க வேண்டியதுதான். ஆணி அடிக்கிற மாதிரி அவள் சொல்லுகிற பதில்களையும், காட்டுகிற அலட்சியத்தையும் நினைத்தால் எதுவுமே கேட்க வேண்டாம் என்று அவளுக்குத் தோன்றிப் போய்விடும். அப்படியும் அவள் விடவில்லை. தான் பெற்றோர்களுடன் சேர்ந்து இருந்துவிட்டு வரத் தன் மாமியாரிடம் மெல்ல அனுமதி கேட்டாள் அவள்.

''நீ போய் என்ன பண்ணப் போறே? உன்னைப் பார்த்தா அவாளுக்கு இன்னும் துக்கம் ஜாஸ்தியாகும். உன் தங்கை ஏற்கனவே கரியைப் பூசிவிட்டுப் போய்விட்டாள். இன்னும் நீ வேறே அங்கே போய் உட்கார்ந்து கொண்டு என் மானத்தை வாங்காதே.''

அதற்கும் மேல் கேட்க வழியில்லை. சாந்தா அடங்கிப் போனாள்.

ஒருவேளை சாரு அப்படிக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டதும் சரியானதுதானோ?

மனசுக்குப் பிடித்தவனுடன் பழகி, விரும்பி மணந்து கொள்ளும் காதல் திருமணங்களில் சீதாலட்சுமியைப் போன்ற மாமியார்களின் ஆதிக்கமும், மதில் மேல் பூனையாக இருக்கும் ராஜேந்திரனைப் போன்று வழ வழா ஆசாமிகளிடம் சிக்கி அடிமைப்படும் நிர்ப்பந்தமும் இருக்காதோ!

எதைப் பற்றி யார் என்ன சொல்லிவிடுவார்களோ என்று பயப்பட வேண்டாமோ? சாரு ராணி சம்யுக்தை பாணியில் விரும்பியவனோடு அப்படிப் போகாமல் அப்பாவைச் சம்மதிக்க வைத்துக் கௌரவமாகக் கல்யாணம் செய்து கொண்டிருக்கலாம்,

சாந்தாவுடைய விவாகத்தை நடத்தவே ஜாதகம், குலம், கோத்திரம் என்று அலக அலசென்று அலசிய அவள் தந்தை, மனம் இணைந்தால் போதுமென்று ஒப்புக்கொண்டிருப்பாரா? அதுவும் சந்தேகம்தான்.

ஆயிரம் பொருத்தம் பார்த்து அவர் அப்படிச் செய்து வைத்த தன்னுடைய கல்யாணம்தான் எந்த விதத்தில் உயர்ந்தது? தன்னையும் தன் வீட்டவர்களையும் எப்பொழுதும் பழித்துக் கொண்டு... தாங்கள் படும் கஷ்டங்களைக் கண்டு அதிலும் தனிப்பட்ட சந்தோஷங்களை அனுபவித்துக்கொண்டு சம்பந்தம் செய்து கொண்டு விட்ட பின் தாங்கள் ஒரு வீட்டவர் ஆகிவிட்ட உணர்வே இல்லாதவர்களாய் இருக்கும் தன் புக்கத்தாரை நினைத்தபொழுது சாரு செய்தது ரொம்பவும் சரியான காரியம் என்று தோன்றியது சாந்தாவுக்கு.

இந்த விஷயம் சென்னையில் மகளிர் கல்லூரி ஒன்றின் ஹாஸ்டலில் தங்கிப் படித்துக்கொண்டிருந்த தன் நாத்தனார் நளினாவுக்குத் தெரிந்தால் என்ன சொல்லுவாள்? அவளும் சாந்தாவின் வீட்டாரைத் துச்சமாகப் பேசுவதில் தாயோடு இணைந்து கொள்வாளோ?

தான் பிறந்த வீடு செல்வது தன் மாமியாருக்கு விருப்பமில்லை என்று தெரிந்து கொண்ட பின் தொடர்ந்து வற்புறுத்தி



எதுவும் கேட்காமல் இருந்து விட்டாள் சாந்தா.

தீபாவளிமுறைக்கு வழக்கம் போல் வருவதாகச் சொன்ன நளினா எழுதியபடி குறிப்பிட்ட தேதியன்று வரவில்லை. அதற்குப் பதில் அவள் கடிதம் வந்தது.

'அம்மா,

நான் என்னுடன் படிக்கும் ரோஸலினின் அண்ணா பீட்டரை நேசிக்கிறேன். முன்பே உனக்கு எழுதலாம் என்று மிகவும் முயன்றும் எழுதக் கை வரவில்லை. சாந்தா மன்னியுடைய தங்கை சாரு காதல் கல்யாணம் செய்துகொண்டதே உனக்குப் பிடிக்கவில்லை என்பதை உன் கடிதத்திலிருந்து புரிந்து கொண்டேன். அப்படி இருக்க எனக்கு மட்டும் நீ அனுமதி தருவாயா? நீ சம்மதிக்கா விட்டாலும் எங்கள் திருமணம் நடக்கும். அண்ணா, மன்னியிடம் சொல்லு. நளினா.'

கடிதம் வந்த அன்று சீதாலட்சுமியின் முகம் காற்றுப் போன பலூனாகச் சுருங்கிப் போய்விட்டது. இனிமேலாவது அவள் கொட்டம் அடங்குமென்று எதிர்பார்த்தாள் சாந்தா.

ஆனால் நடந்ததோ....?

சாரு செய்ததைத்தனக்கு ஏற்பட்டுவிட்ட பெருத்த அவமானமாக ஊர் உலகமெல்லாம் தமுக்குப் போட்ட அவள் மாமியார், "எங்கள் நளினா எனக்கு ஒரு பூமாலை செலவு கூட வைக்காமல் தானே கல்யாணம் செய்து கொண்டு விட்டாள்" என்று எல்லாரிடமும் பெருமையாகச் சொல்லிக் கொண்டதைச் சாந்தாவே கேட்க நேரிட்டது.

கோடுகள் இழுக்கப்படும் விதங்களினால் கோணங்களின் தன்மை மாறுபடுவது போல் உறவின் தன்மைக்கேற்ப மனிதர்களின் பார்வையும் அபிப்பிராயங்களும் மாறுபடுமோ? சாந்தாவுக்குப் புரியவில்லை.

# புள்ளிகள்: செய்திகள்!



## தொழிலதிபர் ஈஸ்வரன்

மொரீஷியஸ் தீவுகளில் உள்ள சிறுபான்மையான தமிழ் பேசும் குடும்பங்களுக்காகத் துதிப் பாடல்கள் அடங்கிய பத்தாயிரம் புத்தகங்களை அங்கு அனுப்புவதில் இவர் மும்முரமாக இருக்கிறார். இப்பாடல்களை தேர்வு செய்யப் போகிறவர் சபாநாயகர் ராஜாராம்.



## ம. பொ. சி.

சுதந்திரப் போராட்டத்தில் தமிழ்நாட்டின் பங்கை ஆராய்ந்து எழுதிப் புத்தகமாக வெளியிடும் பணியில் இறங்கி இருக்கிறார் இவர். சுமார் இரண்டாயிரம் பக்கங்கள் கொண்டதாக இருக்கும் நூலின் தலைப்பு "விடுதலைப் போரில் தமிழகம்". சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த கால கட்டத்தை விவரிக்கும் சரித்திர முக்கியத்துவம் பெறப்போகும் சிறப்புப் பணி. - தொகுப்பு: சிக்கி



## ஏ. வி. எம். சரவணன்

37 ஆண்டுகளுக்கு முன் முதன் முதலாக டப்பிங் முறையை இந்தியத் திரைப்பட உலகில் புகுத்திய பெருமை ஏ. வி. மெய்யப்பன் அவர்களையே சாரும். அவர் புதல்வர்கள் ஏ. வி. எம். குமரன், சரவணன்,(படம்)பாலசுப்பிரமணியம் ஆகியோர் இத் துறையில் நவீன சாதனை புரிந்துள்ளனர். மாக்னா - டெக் எலக்ட்ரானிக் கம்ப்யூட்டர் டப்பிங் முறையை இங்கு நிறுவியுள்ளனர். இதில் சிறு வார்த்தையைக் கூட டப் செய்வதும், மாற்றுவதும் எளிது. பிலிம், நேரம், செலவு எல்லாம் பெருமளவு மிச்சமாகின்றன. இந்த உபகரணங்களை நிறுவுவதற்கென்றே பில் ஒ நெய்ல் என்ற பொறி இயல் நிபுணர் நியூயார்க்கிலிருந்து வந்துள்ளார்.



## ஓவியர் ஜெயராஜ்

தமக்கு நண்பர்கள் அனுப்பும் பிறந்தநாள், திருமணம் போன்ற அழைப்பிதழ்களுக்கு வாழ்த்துக் கூறிப் பதிலெழுதும் போது அவர்கள் படத்தையே வரைந்து அனுப்புகிறார் இவர். அதோடு 'ஜெ'யின் குறும்பும் இணையும்.



— நவீன டப்பிங் சாதனத்தின் ஒரு பகுதி —










# நரையின்மைக்குக் காரணம்?

திருமுருக கிருபானந்தவாரியார்

**ப**ழங்காலத்தில் நீதி நெறிகள், சட்ட ஒழுங்குகள் முதலியன சிறந்த முறையில் செயல்பட்டு மக்களுக்கு உதவி புரிந்தன.

மனக் கவலையில்லாதவர்கள் நரை திரையின்றி வயதுஏறினாலும் இளமை நலங் குன்றாது இன்பத்துடன் இருப்பார்கள்.

ஒரு சிக்கலான வழக்கு; அந்த வழக்குக்கு உரியவர்கள் ஒரு கிராமத் தலைவரிடம் போய் அந்த வழக்கை உரைத்து நியாயம் வழங்குமாறு முறையிட்டார்கள்.

நீதிபதியான அத்தலைவர் பொறுமையுடன் வாதி, பிரதிவாதிகளின் வழக்கைக் கேட்டு, ''இது மிகவும் சிக்கலான வழக்கு; இது என்னால் தீர்க்க முடியாதது; அடுத்த ஊரில் என் தமையனார் கிராமத் தலைவராக இருக்கிறார். அவரிடம் சென்று உங்கள் வழக்கைக் கூறி நியாயம் பெறுங்கள்'' என்றார்.

வழக்குக்கு உரியவர்கள் அவருடைய வார்த்தைகளைக் கேட்டுச் சிறிது தயங்கினார்கள். இவரே முதியவராக இருக்கின்றார்; இவருடைய தலையில் ஒரு முடி கூடக் கருமையாக இல்லை. எல்லா முடிகளும் பஞ்சு போல் வெளுத்து இருக்கின்றன. அவருக்கு அண்ணார் என்றால் அவர் எத்தனை குடுகுடு கிழவராக இருப்பாரோ?'' என்று எண்ணினார்கள்.

நியாயாதிபதியிடம் விடை பெற்றுப் புறப்பட்டு அடுத்த ஊரை அடைந்தார்கள். அங்கே நீதிபதியைக் கண்டார்கள். கண்டவுடன் அவர்கட்கு ஒரு திகைப்பு ஏற்பட்டது. என்ன திகைப்பு? நீதிபதிக்குத் தலையில் ஒவ்வொரு முடிதான் நரைத்திருந்தது.

நீதிபதி வந்தவர்களை அகமும் முகமும் மலர்ந்து வரவேற்றார். இன்னுரை கூறினார். ''என் தம்பி அனுப்ப வந்தீர்களோ?'' என்றார்.

வந்தவர்கள் தங்கள் வழக்கைக் கூறினர். அவர் அந்த வழக்கை ஆறுதலாகக் கேட்டார்.

''அன்பர்களே! இந்த வழக்கு மிகச் சிக்கலானது; அடுத்த ஊரில் என் தமையனார் நீதிபதியாக இருக்கின்றார். அவர் நுட்பமான மதி நலம் உடையவர். நீங்கள் தயவு செய்து அவரிடம் போய் வழக்கினை உரைத்து நியாயம் பெறுவீர்களாக'' என்று கூறினார்.

வழக்குக்கு உரியவர்கள் அடுத்த ஊர் சென்று நீதிபதியைக் கண்டார்கள். கண்டவுடன் அவர்கள் மனத்தில் ஒரு திகைப்பு உண்டாகியது. அவருடைய தலையில் முடிகள் கருகருவென்று நரையின்றி அழகாக இருந்தன.

வழக்கை விவரமாகக் கூறினார்கள். நீதிபதி, ''ஐயன்மீர்! என்னுடைய தம்பியர்கள் அனுப்ப நீவிர் இங்கு வந்திருக்கின்றீர்கள். உங்கள் வழக்கு மிக்க சிக்கலானது. இதற்குத் தீர்ப்புக் கூறுவது அரிது; எனினும் இதுதான் தீர்ப்பு என்று தெளிவாகவும் நியாயமாகவும் கூறினார்.

தீர்ப்பு வழக்குத் தொடுத்தவருக்கும் அடுத்தவருக்கும் மிகவும் திருப்தியாக இருந்தது. அவர்கள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

வந்தவர்கள், ''நீதிபதியவர்களே! எங்கள் வழக்கு சுமுகமாகத் தீர்ந்து விட்டது. ஆனால் எங்கள் மனத்தில் எழுந்த சந்தேகம்தான் தீரவில்லை.

''தங்கள் கடைசித் தம்பிக்குத் தலைமுடி அத்தனையும் நரைத்து முதுமையினராக இருக்கின்றார். நடுத் தம்பி ஒவ்வொரு முடி மட்டும் நரைத்துச் சிறிது முதுமையினராக இருக்கின்றார். எல்லோருக்கும் மூத்தவராகிய தாங்கள் ஒரு முடிகூட நரையின்றி திரையின்றி இளமை குன்றாது வளமையுடன் இருக்கின்றீர். இதற்குக் காரணம் என்ன? இதனை எங்களுக்குக் கூறி எங்கள் ஐயத்தை அகற்ற வேண்டும்'' என்றார்கள்.

நீதிபதி புன்முறுவல் பூத்துப் புகல்கின்றார்: அன்பர்களே! இது வாழ்க்கையின் ரகசியம். அவசியம் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

என் மனைவி தாய் போன்றவள்;

நடுத் தம்பியின் மனைவி சேய் போன்றவள்.

கடைசித் தம்பியின் மனைவி பேய் போன்றவள்.

தாய் குறிப்பறிந்து தானே செய்வாள். சேய் சொன்னதை மட்டும் செய்யும்.

பேய் ஒரு மனிதனைப் பிடித்து ஆட்டி வதைக்கும்.

என் கடைசித் தம்பியின் மனைவி அவனைப் பிடித்துப் பேய் போல் ஆட்டி வருத்துவாள். அதனால் அவன் உடம்பெல்லாம் நரைத்துக்

நரைத்து முதுமையை விரைவில் அடைந்து விட்டான்.

என் மனைவி தாய் போன்ற தயவுடையவள். அவளுடைய அன்பு, பண்பு, அறிவு முதலிய குணங்கள் என்னை எப்போதும் மகிழச் செய்கின்றன. அவளுடைய ஓர் அன்புச் செயலைக் காட்டுகின்றேன், வாருங்கள் என்று படுக்கை வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

படுக்கையில் பட்டுப் புடவையின் ஜரிகை பிழையுடன் கூடிய முன்தானை கோணலாகக் கத்தரித்திருந்தது. அதனை அந்த அன்பர்கட்கு காட்டினார். நானும் என் வாழ்க்கைத் துணைவியும் இந்தக் கட்டிலில் படுத்து உறங்கினோம். அவள் எனக்கு முன் கண் விழித்தாள். பட்டுப் புடவையின் ஜரிகை முன்தானை என் உடம்பின் கீழ் கிடந்தது. அதனை இழுத்தால் என் உறக்கம் கெடும். அதனால் ஆரோக்கியம் கெடும் என்று கருதி கத்தரிக்கோலால் உயர்ந்த பட்டுப் புடவையை ஒரு பொருட்டாகக் கருதாமல் என் உடல் நலம் ஒன்றையே கருதி புடவையின் முன்தானையைக் கத்தரித்துவிட்டுச் சென்றாள். இத்தகைய அன்பும் பண்பும் நிறைந்த மனைவி எனக்கு வாய்த்திருப்பதனால் என் வாழ்வு சிறந்துளது. இதனால் எனக்கு நரையில்லை'' என்றார்.

யாண்டு பல ஆக நரைஇல ஆகுதல்
யாங்கா கியரென வினவுதிர் ஆயின்
மாண்டஎன் மனைவியொடு மக்களும்
நிரம்பினர்
யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே
—பிசிராந்தையார்



அருள்வாக்கு

## அபர்ணா

பரமேசுவரன் பச்சைப் பசேலென்று கப்பும் கிளையுமாக ஒரு மரம் மாதிரி இருந்தால் அம்பாள் ஒரு பசுங் கொடியாக அவரைச் சுற்றிக் கொண்டிருப்பாள். அவர் பட்ட மரமாக காய்ந்த கட்டையாக இருக்கும் போது அவள் என்ன செய்கிறாள்? அப்போதும் அவரைச் சுற்றிக்கொண்டிருக்கிறாள். ஆனால் பச்சைக் கொடியாக இல்லை. இலையே இல்லாமல் நார் மாதிரியான கொடியாக அவரைச் சுற்றிக் கொண்டிருக்கிறாள். அபர்ணா, அபர்ணா என்று அவளுக்குப் பெயர். பர்ணம் என்றால் இலை. இலையே இல்லாத கொடியாக இருக்கும்போது அம்பாள் அபர்ணாவாகிறாள். பர்வத ராஜகுமாரியாகப் பாவித்து ஈசுவரனைப் பதியாக அடைவதற்காக அம்பாள் தபஸ் பண்ணினபோது இலையைக் கூடச் சாப்பிடாமல் கடும் நியமத்தோடு இருந்ததாலேயே இந்தப் பெயர் உண்டாயிற்று என்று ஓர் அர்த்தம் சொல்வதுண்டு. எனக்கென்னவோ ஸ்தாணுவாக ஈசுவரன் இருக்கும்போதும் அவனை விடாமல் பற்றிக் கொண்டிருக்கிற அம்பாள் கொடிதான் 'அபர்ணா' என்று தோன்றுகிறது.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

## எழுதியது யார்?

ஜெனிவா
6-6-26

அன்புள்ள அம்மா, அப்பா,

நான் சமர்த்தாக இல்லாமலிருந்ததற்கு வருத்தப்படுகிறேன், ஆனால் இன்று முதல் நான் நல்லவளாக இருக்கப்போகிறேன். நான் சமர்த்தாக நடந்துகொள்ளவில்லையானால் என்னுடன் பேசவே பேசாதீர்கள். நான் நல்லபடியாக நடந்து கொள்ள என்னால் முடிந்த வரை முயல்வேன். நீங்கள் சொல்கிறபடியெல்லாம் கேட்டு நடந்து கொள்வேன்.

அன்புடன் உங்கள்

........................

கடிதத்தை எழுதியது யார்? 53ம் பக்கம் பார்க்கவும்.



# பழுத்த இலையில் ஒரு பச்சை நரம்பு

வினோதானந்த்

அன்னம்மாளுக்கு வயசு அறுபது.

ஒட்டிய கன்னங்கள், குழி விழுந்த கண்கள், பல்லும், சொல்லும் போய்விட்ட முதுமை, நெஞ்செலும்பைத் தோலுரித்துக் காட்டும் வற்றிய உடம்பு இப்படியாகக் கற்பனை செய்துகொண்டால் அந்த உருவம் நிச்சயம் அன்னம்மாளாக இருக்காது.

கன்னங்கள் ஒட்டியிருக்கவில்லை. கண்கள் குழி விழுந்து காணப்படவில்லை. பற்கள் பாதிக்கு மேல் முதுமைக் காற்றில் கிளை முறிந்து விழுந்து விட்டாலும் சொற்கள் விழவில்லை. நெஞ்செலும்பை எண்ணிப் பார்க்கத் தோதாக உடம்பு வற்றியிருக்கவில்லை.

நன்றாகத்தான் இருந்தாள்.

போன வாரம் கோமதி கேட்டாள்:

''பாட்டி! இன்னும் இந்த ஒலகத்திலெ எதைச் சாதிக்கணும்னு உட்கார்ந்து கிடக்கிங்க? உங்க புருஷன் நினைப்பே வரலியா? இல்லே, அவர் இன்னும் உங்களைக் கூப்பிடலியா?''

அன்னம்மாளின் வாயைக் கொத்தி விடுவதில் அந்த வட்டாரத்துப் பெண்கள் சிலருக்கு அல்வா தின்பது மாதிரி.

''அவர் உசிரோடிருந்தப்ப அவர் நன்னா இருக்கணும்னு தெய்வத்தை வேண்டிண்டே இருந்தேன். வாய்க்கு ருசியா, உடம்புக்கு ஏத்துக்கிற விதமா சமைச்சுப் போட்டேன். அவர் சந்தோஷமே என் சந்தோஷமா, அவரையேஎன்னோடஉலகமா நினைச்சு வாழ்ந்திண்டிருந்தேன். இப்ப அவர் இல்லே. அந்தத் தனி உலகத்தைக் கடல் கொண்டு போச்சு. வேற உலகம் கண்ணுல தெரியறது. புதுப் புது மனுஷாளா உங்களை யெல்லாம் பார்க்கிறேன். உங்களுக்காகக் கொஞ்ச நாள் வாழ வேண்டாமா?''

அவர்கள் பதில் சொல்ல முடியுமா?

சின்னச் சின்னப் பெண்ணாய் இருந்த காலத்துக் கதை ஒன்றை இதுவரை பத்துப் பதினைந்து முறை சொல்லி விட்டாள். ஒவ்வொரு முறையும் சொல்லிவிட்டு அவள் சிருஷ்டி பண்ணிக் காட்டுகிற மாதிரி ஒரு சக்தி சொரூபம் அங்கே தரிசனம் காட்டும்.

அவள் அன்னமாக இருந்த வயசு.

பெண் பார்க்க வருகிறார்கள்.

பையனின் தாய் பாடச் சொல்கிறாள்.

குளுமையான சாரீரம் அன்னம்மாளுக்கு. அந்த அம்மையார் பாடச் சொன்னதும் சிறிதும் தயங்காமல் ஆரம்பித்தாள்.:

'பாரோ கிருஷ்ணய்யா....'

எல்லாரும் சிரித்தார்கள். பையனும் தலையை மறுபுறம் திருப்பிக்கொண்டு சிரித்தான்.

''ஏண்டியம்மா! நாள் நட்சத்திரம் பாக்க வேண்டாமா? அதுக்குள்ளே வரச் சொல்றே ஆனாலும் உனக்கு அவசரம்தான்....''

பையனின் தாயார் அப்படிக் கேட்டதும் முதலில் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. சில நொடிப் பொழுதில் ஒரு மின்னல் வெட்டிப் பேச்சின் கருப் பொருளை அவளுக்குத் துல்லியமாக எடுத்துக் காட்டியபோது உடம்பு முழுக்கப் பரபரவென்று ஏதோ ஊர்கிற மாதிரி நெளிந்தாள். முகம் வெட்கிப் போய்ச் செம்மை ஏறிற்று. எழுந்து உள்ளே ஓடிவிட்டாள்.

அந்தப் பையனின் பெயர் கிருஷ்ணன்!

அலைகளாய் நுரையை அள்ளிக்கொண்டு அந்த அறையின் சுவர்களில் மோதி மோதித்



திரும்பிய அந்தச் சிரிப்பே அவனுடைய கல்யாணத்தைச் சுலபமாக நடத்தி முடிக்க உதவியது.

தனிக் குடித்தனம் வைத்தவுடன் அவன் கேட்டான்:

''எங்கே, அந்தப் பாட்டைப் பாடேன்.''

''ஊஹூம். அதான் நீங்க வந்துட்டீங்களே!....''

'பளிச்'சென்று பதிலே அவன் மீது தெளித்தாள்.

மறுபடியும் அவள் அந்தப் பாட்டைப் பாடியது எப்போது?

அன்னம்மாளுக்கு மூன்று பிள்ளைகள். இரண்டு பெண்கள்.

கிடுகிடுவென்று வளர்ந்து விருட்சங்களாகிச் சம்பாதிக்கத் தொடங்கிவிட்ட பிள்ளைகள். ஒரு சுபயோக சுபதினத்தில் முகூர்த்த கால கட்டத்தில் கழுத்தை நீட்டி மாங்கல்ய பாக்யம் பெற்றுப் புருஷனோடு வாழப் போய்விட்ட பெண்கள்.

''ஏன்னா! காலம் என்ன அவசரமா ஓடறது! பிள்ளைகளைப் பெத்ததும் தெரியலே. இன்னைக்குப் பிள்ளைகளெல்லாம் தலைக்கு மேலே வளர்ந்து ஒண்ணும் தெரியாம, 'இந்தாம்மா! இந்த மாசத்துச் சம்பளம்'னு வந்து நிக்கறப்ப வேடிக்கையா இல்லே?...''

''எனக்கு அப்படித் தோணலே. உன்னைப் பார்க்கிறப்போ வருஷா வருஷம் உனக்கு வயசு குறைஞ்சுண்டு வர மாதிரி இருக்கு!''

''அப்படியா? இன்னும் கொஞ்ச வருஷம் போனா நான் உங்களுக்கு ஒரு குழந்தை மாதிரின்னு சொல்லுங்க....''

''வாஸ்தவம்தான் அன்னம். ஆனா அந்தக் குழந்தையை ஆசையோட தினமும் பார்த்துப் பார்த்துப் பூரிக்கப் போற அதிர்ஷ்டம், அது சிரிக்கிற சிரிப்பிலே லயிச்சுத் தன்னையே மறக்கற சுகானுபவம் எனக்குக் கிடைக்குமான்னு.....''

அவள் அவருடைய வாயைப் பொத்தினாள்.

''அப்படிச் சொல்லாதீங்க. பொறந்தவா அத்தனை பேரும் ஒரு நாள் போகப் போறவா தான். யார் முன்னே, யார் பின்னே என்கிறதெல்லாம் நீங்களும் நானும் பேசி முடிவு பண்ணற விஷயமில்லே. அந்தப் பேச்சை மட்டும் தயவு செஞ்சு இனிமே எடுக்காதீங்க. நாம சிரிக்கிறதுக்கும், பேசறதுக்கும் கத்துண்டிருக்கிறதே மரண பயத்தை மறக்கறதுக்குத்தான்....''

''அட!.... தத்துவம் கூடப் பேசத் தெரியுமா உனக்கு?....''

கிருஷ்ணன் சிரித்தார்.

''இப்படியே நீங்க என்னைக்கும் சிரிச்சிண்டிருங்கோ. உங்க முகம் கொஞ்சம் கண்டிப் போனா என்னாலே தாங்க முடியலே....''



''அன்னம்! இவ்வளவு நாளும் என் சந்தோஷமே உன் சந்தோஷமா இருந்தது. சொச்ச காலத்துக்குஉன் சந்தோஷமே என் சந்தோஷமா இருக்கட்டுமே! உன் இஷ்டப் படியே நடந்துக்கறேன்....''

சத்திய வாக்காக ஏற்றுக் கொண்டாள் அன்னம்மாள்.

இரண்டு பிள்ளைகளுக்குத் திருமணம் ஆயிற்று. தனி வீடு பார்த்து அவர்களைக் குடியமர்த்தி விட்டாள் அன்னம்மாள். கொஞ்ச நாள் அவர்கள் மகிழ்ச்சியாக, சுதந்திரமாக இருக்க வேண்டுமாம்.

''மனசு கசங்கிப் போனா முகம் உலர்ந்து போகும். இளவயசு. குறுக்கும் நெடுக்கும் நாம வளைய வந்திண்டிருந்தா அவாளுக்குத் தவிப்புத்தான் ஜாஸ்தியாகும்!...''

அன்னம்மாள் அப்படிச் சொன்னதும் கிருஷ்ணனுக்குப் பெருமையாக இருந்தது.

''நீ பள்ளிக்கூடம் போகலேன்னாலும் உனக்குத் தெரிஞ்சிருக்கிற விஷயங்களில் பாதிகூட எங்களைப் போல் உள்ளவங்களுக்குத் தெரியாது....'' என்று அவளைப் பாராட்டினார்.

''ஆமாம், பள்ளிக்கூடத்துல இதெல்லாமா கத்துத் தருவா?'' என்று இடக்காகக் கேட்டாள்.

ஒரு நாள்.

கடைசிப் பிள்ளை முகுந்தன் வேலைக்குப் போய்விட்டான்.

சாய்வு நாற்காலியில் படுத்திருக்கிறார் கிருஷ்ணன். கொஞ்ச நாளாக விட்டு விட்டு நெஞ்சு வலி வந்து கொண்டிருக்கிறது. அவளிடம் சொல்லவில்லை.

'உங்க முகம் கொஞ்சம் கண்டிப் போனா என்னால தாங்க முடியலே....'

''அன்னம்! எனக்காக ஒரே ஒரு தரம் அந்தப் பாட்டைப் பாடிக் காட்டேன்...''

''இப்ப நான் பாடினா உங்களாலே ரசிக்க முடியுமா?''

''முடியும்....''

பாட ஆரம்பித்தாள்.

''பாரோ கிருஷ்ணய்யா.....''

குரலில்தான் வயோதிகம். பாவத்தில் அல்ல. நாதத்தில் அல்ல. அந்த பாவமும், நாதமும் ஆளுமை மிடுக்கோடு இருந்தன.

பாடி முடிந்து அவள் நிமிர்ந்தபோது கிருஷ்ணன் தொலை தூரத்துக்குப் போய் விட்டிருந்தார்.

அந்த ஒரே நாளில் துன்பத்தை யெல்லாம் கண்ணீராகக் கொட்டி மனசை உலர்த்திக் கொண்டு விட்டாள்.

'அந்தத்தனி உலகத்தைக்கடல்கொண்டு போச்சு. வேற உலகம் கண்ணுல தெரியறது. புதுப் புது மனுஷாளா உங்களையெல்லாம் பார்க்கிறேன். உங்களுக்காகக் கொஞ்ச நாள் வாழ வேண்டாமா?'

தன்னுடைய அந்தக் கேள்விக்கு அன்னம்மாளே கடந்த பத்து ஆண்டுகளாகப் பதில் சொல்லிக் கொண்டிருக்கிறாள்.

'கோகுலம்' என்ற பெயரைப் பொறித்துக்கொண்டு கம்பீரமாகக் காட்சியளிக்கும் அந்தப் பெரிய வீட்டில் அன்னம்மாள் ஆட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மூன்றாவது பிள்ளை முகுந்தனும், அவன் மனைவி சாருமதியும் அவளின் செங்கோலாட்சிக்குத் துணைநிற்கும் பாதுகாவலர்கள்.

அன்னம்மாள் இப்போது அந்த வீட்டுக்கு மட்டுமல்ல; அந்த வட்டாரத்துக்கே சொந்தக்காரி. அவளைக் கேட்காமல், அவளைக் கலந்தாலோசிக்காமல் ஒரு விசேஷம் நடந்துவிடுமா அங்கே? எத்தனை பேர், எத்தனை கேள்விகள், எத்தனை பிரச்னைகள்!

அந்தி சாய்ந்து கொண்டிருக்கும் அந்த வேளையில் திண்ணையில் அமர்ந்திருக்கிறாள் அன்னம்மாள்.

வழக்கம்போல் அவளைச் சுற்றிப் பெண்கள் கூட்டம்.

அந்த யந்திரத்தின் உடலில் இப்போது சற்றுத் தேய்மானம் கண்டிருந்தது. என்றும் அந்தச் சிரிப்பு மட்டும் மறையவில்லை. என்றும் மாற்றுக் குறையாத சிரிப்பு அது.

முகுந்தன் வருகிறான்.

''அம்மா....!''

''என்னடா?''

''என்னைக் கோயமுத்தூர் பிராஞ்சுக்கு மாத்திட்டாங்க. இன்னும் பதினைஞ்சு நாளிலே கிளம்பணும்....''

அன்னம்மாள் எழுந்தாள்.

''சொச்சக் கதையை நாளைக்குச் சொல்றேன்....'' என்று கூடியிருந்த பெண்களுக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு உள்ளே வந்தாள்.

''ஏண்டா! இந்த வீட்டை விட்டுப் போகணும்னு சொல்றே?...''

''வீட்டைக் கையிலே எடுத்துண்டு போக முடியுமாம்மா?'' முகுந்தன் சிரிக்கிறான்.

இவ்வளவு நேரமும் மலர்ந்திருந்த முகம் லேசாகக் கூம்பிப் போகிறது.

''அது தெரியும்டா. அவர் பேரைச் சொல்லிண்டிருக்கிற வீடுடா இது. இங்கே

---

''செக்கிலே கையெழுத்து வாங்கணும்னா, என் புருஷன் தூங்கிகிட்டிருக்கையிலே எழுப்பித் தான் வாங்குவேன்....''

''ஏன் அப்படி?''

''அப்போது தான், ஆபீஸ் ஃபைலாக்கும்னு நினைச்சுட்டு, ஏன் எதற்குன்னு கூடக் கேட்காம கையெழுத்துப் போட்டுடுவாரு!''

- எஸ். எம். சற்குணம்





"முதன் முதலாக என் ஆபரேஷன் தியேட்டருக்குள் நுழையும் ஆசாமி நீங்கள் தான்! வலது காலை எடுத்து வைத்து வாங்க!"

இருக்கறப்போ அவரோடவே இருக்கிற மாதிரி நெனைச்சுகிட்டிருக்கேன். இதை விட்டுட்டு எப்படிடா போறது?"

"என்னம்மா செய்ய முடியும்?"

"மூத்தவங்கதான் ஒவ்வொரு திக்காப் போயிட்டாங்கன்னு உனக்கும் மாற்றல் வந்துடுத்தே!...."

அன்று இரவு.

அன்னம்மாள் தூங்கவில்லை.

கிருஷ்ணன் எதிரில் வந்து நின்றார்.

"பாரோ கிருஷ்ணய்யா..." என்று அவள் பாட ஆரம்பித்து ராகங்களோடு ஐக்கியமாகி முடிவில் அவற்றிலிருந்து மீண்டு அவரைப் பார்க்கையில், அவர் இயற்கையோடு ஐக்கியமாகிப் போயிருந்தது....

உலர்ந்திருந்த கண்களில் லேசாக ஈரக்கசிவு.

'ஒருத்தருக்கு எதுவுமே நிலையில்லேன்னு சொல்றனே... அதுக்கு இதுதான் அர்த்தமோ?....'

"அம்மா! இன்னும் நீ தூங்கலியா?"

முகுந்தனின் குரல்.

"தூக்கம் வரலியேடா. அது சரி, நீ ஏன் முழிச்சிண்டிருக்கே?..."

வறட்சியாகச் சிரிக்கிறாள்.

"அம்மா! எங்க கம்பெனி மானேஜர் இந்த வீட்டை வாடகைக்கு எடுத்துக்கிறேன்னு சொல்றார்...."

அவள் பதில் சொல்லவில்லை.

'காலையில் பார்த்துக் கொள்வோம்' என்று அவனும் பேசாமல் இருந்து விட்டான்.

காலையில்—

அன்னம்மாளின் முகத்தில் வாட்டம். நேற்று இரவு அவள் தூங்கியிருக்க மாட்டாள். எப்படித் தூக்கம் வரும்?

ஒன்று இரண்டு மூன்று என்று முகுந்தன் புறப்பட வேண்டிய நாள் நெருங்க நெருங்க மகிழ்ச்சியும், மன நிம்மதியும் அன்னம்மாளை விட்டு விலகி விலகிச் சென்றுகொண்டிருந்தன.

ஐந்தாம் நாள்.

"முகுந்தா! எனக்கும் கூட மாற்றல் வந்துடும் போலிருக்கேடா!..."

திடுக்கிட்டான்.

அம்மாவின் பேச்சு எதைச் சுற்றிச் சுழல் வட்டம் அடிக்கிறது என்பதை உணர்ந்து கொண்டபோது, வேதனை நெஞ்சுக்குள் பரவி அவனை மௌனத்தின் சன்னிதானத்தில் நிறுத்தி வைத்தது.

சதா சிரிப்பை உமிழ்ந்து கொண்டிருந்த அம்மாவை இமைகள் இமையாமல் பார்த்துக்கொண்டே இருந்தான்.

கிருஷ்ணன் மறைந்து விட்டாலும் அவருடைய பெயரை நினைவு படுத்திக்கொண்டிருக்கிறது அந்த வீடு. தன் முதுமையிலும் பழுத்த இலையில் ஒரு பச்சை நரம்பாய் அவருடைய ஞாபகம் அவளுடைய ஜீவனை இழுத்து நிறுத்திக் கொண்டிருந்தது. இராமன் இருக்கும் இடம் அயோத்தி என்பது போல் கிருஷ்ணன் இருந்த அந்த வீட்டையே ஒரு துவாரகாபுரியாக எண்ணி அன்னம்மாள் மனசில ஒரு வளையில்லாமல் கலகலப்பாக இந்நாள் வரையிலும் இருந்து வந்ததை அவன் நினைத்துப் பார்த்தான்.

மாற்றல் என்ற ஒரு சொல் அவளுள்ளும் ஒரு மாறுதலைச் சடுதியில் ஏற்படுத்தி விட்டதைக் காண்கையில் அவன் யோசிக்க ஆரம்பித்தான்.

இதற்கு என்ன பரிகாரம்?

புதன் கிழமை மாலை.

"அம்மா! எனக்கு மாற்றல் இல்லேம்மா. இங்கேயே இருக்கச் சொல்லிட்டாங்க!..."

"அப்படியா?...."

அந்த ஒரு சொல்லை அவள் உச்சரித்த விதத்திலேயே பாதி குணம் தெரிந்தது.

ஒரு வாரத்துக்குப் பின் ஒரு நாள் காலை.

"சாருமதி! நான் போயிட்டு வரேன்..."

முகுந்தன் புறப்பட்டான்.

"யாரோ வரச் சொன்னதாகச் சொன்னீங்களே, போய்ப் பாருங்க...."

"அவரைத்தான் பார்க்கப் போயிண்டிருக்கேன். அப்புறம் நான் மாற்றல் வேண்டாம்னு சொன்னதையோ, கம்பெனியில அதை ஏத்துக்க மறுத்திட்டதையோ, நான் வேலையை ராஜிநாமா செஞ்சிட்டதையோ தவறிக்கூட அம்மா கிட்டச் சொல்லிடாதே....."

"சொல்ல மாட்டேங்க. கவலைப்படாமப் போய் நல்ல செய்தியோட வாங்க...."

சாருமதி சிரிக்கிறாள்.

முகுந்தன் வெளியே வந்தான்.

அன்னம்மாள் தன்னைச் சுற்றி அமர்ந்துள்ள பெண்களிடம் ஏதோ சொல்லிச் சிரித்துக் கொண்டிருக்கிறாள்.

"நான் போயிட்டு வரேம்மா.."

"போயிட்டு வா. இந்த மட்டிலும் கருணை காட்டி உன்னை இங்கேயே இருக்கச் சொன்ன அந்த மகராஜன் செஞ்சீவியா இருக்கணும்!...."

அந்த வாழ்த்துக்கள் முகுந்தனின் கூடவே தொடர்ந்து வருகின்றன.





# கணவனைக் கடித்தால் என்ன அர்த்தம்?

**ம**னோதத்துவ வைத்தியர் டாக்டர் மாத்ருபூதம். சிதறுண்ட ஆளுமை (Schizophrenia) அதீத மனச் சோர்வு, (Manic depressiveness) போன்ற மனோ வியாதிகளால் அவதிப்படும் பலருக்கு இவரால் புது வாழ்வு மலர்ந்திருக்கிறது. டாக்டர் மாத்ருபூதத்தின் பட்டியலில் உள்ள மன நோயாளிகள் பல்வேறு சமூக மட்டத்தைச் சேர்ந்தவர்கள். கணவனை அடியோடு வெறுத்து, அவனுடைய ஒவ்வொரு செயலிலும் குறை கண்டு தன்னைவிட வயதில் மிகக் குறைந்த இளைஞனோடு உறவு கொள்ளத் துடிக்கும் பணக்காரப் பெண் இதில் உண்டு. பாடம் சொல்லிக் கொடுக்க வந்த பக்கத்து வீட்டுப் பையன் மேல் ''ஒருதலை ராகம்'' கொண்ட பள்ளிச் சிறுமியும் உண்டு. இந்தப்பெண் ''கிடுகிடு''வென்று ஆங்கிலத்தில் அந்தப் பையன் மேல் ஒரு காதல் கவிதை எழுதி அவனிடம் கொடுத்தாள். அவன் அலட்டிக் கொள்ளாமல் அதிலே உள்ள இலக்கணப் பிழையையெல்லாம் அடித்துத் திருத்திக் கொடுத்தானாம்!



டாக்டர் மாத்ருபூதம்



ஒரு பேராசிரியர் ரொம்ப வயதான பின்னர் கல்யாணம் செய்து கொண்டு மனைவியுடன் முதல்தரமாக கடற்கரை போன போது திடீரென்று புத்தி பேதலித்து, உடையைக் களைந்து நிர்வாணமாகக் குதிக்க ஆரம்பித்தாராம். அன்று அவரைக் கொண்டு வந்து மன நோய் மருத்துவ மனையில் விட்ட மனைவி எத்தனையோ ஆண்டுகளாக அவரை ஒருமுறை கூடப் பார்க்க வரவில்லையாம். இதைச் சொன்ன டாக்டர் ஒரு சேரிவாழ் ஜோடியைப் பற்றியும் குறிப்பிட்டார். பரம ஏழைகளான இந்தத் தம்பதிக்குள் நிறையப் பாசம் உண்டு. அந்த மனைவிக்கு ஒரு விநோதமான மூளைக் கோளாறு. தினம் இரவு பன்னிரண்டு மணிக்கு அவள் விழித்துக்கொண்டு புருஷன் தோளிலே அழுந்தக் கடிப்பாளாம்! அவன் தன்னைவிட்டு விலகாமல் பக்கத்திலேயே இருக்கிறான் என்று உறுதிப்படுத்த உள் மனம் செய்தவேலை இது. ''ஏனப்பா இவளை ஆஸ்பத்திரியில் சேர்க்கக் கூடாதா?'' என்று டாக்டர் கேட்டபோது கணவன், ''பாவம், போயிட்டுப் போகுதுங்க. பிரியத்தினாலே தான்னு சொல்றீங்க; பொறுத்துக்கிட்டாப் போச்சு; பிரிச்சு ஆசுபத்திரியிலே விட்டா அது வாடிச் செத்துடுங்க'' என்றானாம்!

பேட்டி: ராஜரங்கன்



## 2. முள்ளின் மீதும் மோகன ராகம்

அது ஒரு சீசன்.

அந்த சீசனில் சிவில் நீதிமன்றங்களில் அவன் பெயர் கூப்பிடப்படாத நாளே கிடையாது.

ஒரே படத்துக்கு முப்பத்தொன்பது கடன்காரர்கள்! ஒரு கடன் பத்திரத்திலும் அவன் கையெழுத்துக் கிடையாது! ஆனாலும் அவன் தான் பாத்தியப்பட்டவனானான்!

கூட்டுச் சேரும்போது நம் அளவுக்காவது வசதி யுள்ளவர்கள் அல்லது சக்தியுள்ளவர்களோடு கூட்டுச் சேர வேண்டும் என்று அவனது பாட்டனார் வெள்ளையன் செட்டியார் அடிக்கடி கூறுவார்.

அவனுடைய பங்காளி வசதியற்றவர். அதனால் அவன் பெயரிலேயே தண்டோராப் போடப்பட்டது.

அமீனாவைச் சந்திக்கத் தூக்கக் கலக்கத்துடனேயே வெளியிலே வந்தான்.

மரணத்தின்போது உயிர் ஊசலாடுவதை விடக் கடன்காரனின் முன்னால் தலை குனிந்து நிற்பது கொடுமையானது.

எத்தனையோ அவமானங்களைத் தாங்கியே தீரவேண்டிய அவன், அதையும் தாங்கத்தான் வேண்டியிருந்தது.

அந்தச் சீசனில் பாடல்களும் ஏராளம். பாட்டுக்குப் பணம் வாங்கி வருவது தெரிந்தோ தெரியாமலோ, கடன்காரர்கள் முன்கூட்டியே வாசலில் வந்து நிற்பார்கள். கொண்டு வந்த பணத்தை அப்படியே கொடுத்துவிட்டுச் சாப்பாட்டுச் செலவுக்கு யாருக்காவது டெலிபோன் செய்யவேண்டி வரும்.

அன்றைக்கும் அதுதான் நடந்தது.

உடம்பு ஆரோக்கியமாக இருந்தது. நம்மால் சம்பாதிக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. அதனால் பணம் போகிறதே என்ற கவலை குறைவாகவே இருந்தது.

பணமும், மானமும் ஒருசேரப் போய்க் கொண்டிருந்த காலமல்லவா அது!

ஏற்கனவே சிலமுறை எழுதியிருக்கிறேன். அவனது தாயார் சொல்லி யிருக்கிறார்கள். 'நந்தும் படைத்த பண்டம் நாய் பாதி பேய் பாதி' என்று.

அவனது பாட்டனார் வெள்ளையன் செட்டியார் சென்னை அயவனூரம் கிராமத்தை நாற்பது ஆண்டுகளுக்கு முன் அப்படியே ஏலத்தில் எடுத்திருந்தார். இப்போது பத்துக் கோடி ரூபாய் பெறுமானமுள்ள அந்தச் சொத்துக்களைப் பலபேர் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்கள். கோர்ட்டில் இருபத்தொரு வழக்குகள் நடந்து கொண்டிருக்கின்றன. முழு அயனாவரமும் வெள்ளையன் செட்டியாரின் சொத்து. அவரது பிள்ளைகள் காட்டிய அலட்சியத்தால் அந்தச் சொத்தும் அப்படிப் பறிபோயிற்று.

இன்று பத்து லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள ஒட்டநத்தம் ஜின்னிங் பாக்டரியை, அடிமாட்டு விலைக்கு விற்றுவிட்டார்.

அவனது தகப்பனார் சம்பாதித்த சொத்துக்களும் அப்படியே பறிபோய்விட்டன.

அதே ரத்தம் அதே பாதையில்தானே செல்ல வேண்டும்!









# மனவாசம்

## கண்ணதாசன்

'வரவு எட்டணு செலவு பத்தணு' என்பதே வாழ்க்கையாயிற்று.

அப்பொழுது அள்ளி அள்ளிக் கொடுத்த புண்ணியவான்களை அவன் மறக்க முடியுமா?

சின்னப்பாதேவர், டைரக்டர் ராமண்ணு, அஞ்சலி தேவி — எல்லாப் பெயர்களையும் குறிப்பிடுவதென்ருல் பக்கம் போதாது.

'எங்காவது சென்னையில் ஒதுக்குப்புறத்தில் பத்து ஏக்கரில் ஒரு தோட்டம் வாங்கி, சிட்டுக் குருவி போல் பறந்து திரிய வேண்டும்' என்று அவன் ஆசைப்பட்டான்.

பத்து ஏக்கர் என்ன, பட்டணத்தையே விலைக்கு வாங்குமளவுக்குப் பணம் வந்தது; ஆனல் காலணு மிஞ்சவில்லை!

'அவனது ஆசைகள் எதுவுமே நிறைவேறக் கூடாது' என்பது ஆண்டவன் கட்டளை.

பாரதியின் காணி நிலம் பாடலைப் படித்து விட்டு, அப்படியொரு தோட்டத்தை அமைத்துக்கொள்ள அவன் பட்ட ஆசை பலனின்றிப் போய்விட்டது.

மலையைக் கண்டாலும், நதியைக் கண்டாலும் இங்கே கொஞ்சம் நிலம் நமக்கு இருக்கக் கூடாதா என்ற ஆதங்கம் எழும். அவன் நினைத்திருந்தால் வாங்கியிருக்கவும் கூடும்.

பணம் மிஞ்சவில்லை என்பது மட்டும் முழுக் காரணமல்ல; பணம் வந்தபோது அவனுக்கு அந்தப் புத்தியும் இல்லை.

ரத்தத் திமிரில் உள்ள அலட்சியம், எப்போதும் இப்படியே பணம் வரும் என்ற கற்பனை, நம்முடைய ஆரோக்கியம் சாகும் வரை நன்ருகவே இருக்கும் என்ற மதமதப்பு; சிறுகக் கட்டிப் பெருக வாழும் சமூகத்தில் பணத்தைத் தூக்கிக் கொடுத்துப் பாடு பட்டவன் அவன்.

சப்தி கொண்டு வந்திருந்த கடன்காரருக்குக் கையில் இருந்த ஐயாயிரம் ரூபாயைத் தூக்கிக் கொடுத்துவிட்டு. மீண்டும் படுத்துவிட்டான்.

தூக்கம்—

அவனுக்குக் கடவுள் அருளிய வரமும், சாபமும் அதுதான்! எவ்வளவு துன்பங்களிருந்தாலும் அவன் கவலை இல்லாது தூங்குவான், அது வரம்; நல்ல காரியங்கள் செய்ய வேண்டிய நேரத்தையும் தூங்கிக் கெடுப்பான், அது சாபம்!

''தினமும் மவுண்ட்ரோடு செல்ல என் ஸ்கூட்டரில் லிஃப்ட் கேட்பாள். ஏற்றிச் செல்வேன்! இன்று என் ஸ்கூட்டர் ரிப்பேர்!''





அந்தக் காலத்தில் தூங்கி எழுந்துமீண்டும் ஒரு முறை குளித்தால், மூளை சுறுசுறுப்பாக இருக்கும். அது ஒரு சுகமான காலம். உடம்பைப் பொறுத்தவரை.

ஏதாவது எழுதலாம் என்று 'தென்றல்' அலுவலகத்தில் வந்து உட்கார்ந்தான். தமிழ் தேசியக் கட்சி நண்பர்கள் சிலர் வந்துவிட்டார்கள்.

அப்போது த. தே. க. அலுவலகமும், அதன் சார்பில் நடத்தப்பட்ட 'விடிவெள்ளி' தினப் பத்திரிகையின் அலுவலகமும் தென்றல் அலுவலகத்துக்குக் கொஞ்ச தூரத்திலேயே இருந்தன.

அவர்கள் வந்ததும் எழுத்து வேலை நின்று விட்டது. அரசியல் அரட்டை தொடங்கி விட்டது.

அரசியலில் தங்களுக்குப் பிரமாதமான எதிர்காலம் இருப்பதாகவே, அவனது த. தே. க. நண்பர்கள் கருதினர்கள்.

ஆனல் காடு மேடுகளில் எல்லாம் தி.மு.க. வளர்ந்த வளர்ச்சியில் அவனுக்கு ஓர் அச்சம் இருந்தது.

இரவிலே தனியாகப் போகும் மனிதன், திருடனுக்குப் பயம் காட்ட விசில் அடிப்பான். அவனும் அந்த அச்சம் காரணமாகவே பொதுக் கூட்டங்களில் ஆரவாரமாகப் பேசிக் கொண்டிருந்தான்.

த. தே. க.வின் முதற் கூட்டமான கடற்கரைக் கூட்டத்தில் அவன் ஒன்றைக் கண்டிருந்தான். அதாவது தங்களோடு வந்திருந்தவர்களை விட, தங்களை வரவேற்பவர்கள் அதிகம் இருக்கிருர்கள் என்பதுவே அது.

அந்த மாபெரிய கூட்டத்தில் காங்கிரஸ்காரர்களும், திராவிடர் கழகக்காரர்களும் அதிகமாக இருந்தார்கள். அவர்களுக்கு நடு நடுவே கலகம் செய்வதற்காகத் தி. மு. க. வினரும் கலந்திருந்தார்கள்.

'அண்ணு அண்ணு' என்று யாரைப் பன்னிரண்டு வருஷ காலம் அழைத்து வந்திருந்தோமோ, அவரை 'அண்ணுதுரை' என்றே அழைக்கும்படி தோழர் சம்பத் சொல்லிக் கொடுத்திருந்தார்.

கூட்டத்தில் பிரபல நடிகர் மேயர் முனுசாமி நன்ருகவே நடித்தார். கரு தமிழழகன் போன்றவர்கள் உணர்ச்சிப் பூர்வமாகப் பேசி முடித்தார்கள். கோவை செழியன் பேசும் போது கலவரம் வந்தது.

கலவரத்தை திராவிடர் கழகத்தினரும், காங்கிரஸ்காரர்களும் சேர்ந்து அடக்கினர்கள்.

அவனல் சரியாகப் பேச முடியவில்லை. நீண்ட நாள் ஒரு கொள்கையை வெறியோடு சொல்லிவிட்டு, திடீரென்று தலைகீழாக மாற்றும்போது குழப்பம் ஏற்படத்தான் செய்யும். ஆனல் சம்பத் மிகவும் தெளிவாக இருந்தார்.

ஏற்கனவே புதுடெல்லியில் பெரியார் அவரைச் சந்தித்துத் தயார் செய்து வைத்திருந்ததால், தி. மு. க.வுக்கு எதிரான புதிய தேசியக் கொள்கையைப் பேசுவதில் அவர் குழப்பமில்லாமல் இருந்தார். இதை அவரது பாராளுமன்ற வாழ்க்கையில் கிடைத்த லாபம் என்று கூற வேண்டும்.

பாராளுமன்ற வாழ்க்கையில் சம்பத்துக்கு ஏற்பட்ட அனுபவம், அகில இந்திய அடிப்படையில் அவரைச் சிந்திக்க வைத்திருந்தது.

அன்று அவர் பேசிய பேச்சை மனத்தில் வைத்துக் கொண்டுதான் வெளியூருக்குச் சென்ற பேச்சாளர்கள் எல்லாம் நன்றாகப் பேச ஆரம்பித்தார்கள்.

த. தே. க. வுக்கு எடுத்த எடுப்பிலேயே இரண்டு லட்சம் உறுப்பினர்கள் கிடைத்திருந்தார்கள். அத்தனை பேரும் போஸ்ட் கார்டு மூலமாகவே சேர்ந்திருந்தார்கள்.

அந்த போஸ்ட் கார்டுகள் ஆறு மூட்டைகளாகக்கட்டி வைக்கப் பட்டிருந்தன. கணிசமான பகுதியினர் திராவிடர் கழகத்தில் இருந்தும் வந்திருந்தார்கள்.

தி. மு. க.வுக்கு எதிரான ஒரு புதிய சக்தியை எதிர் பார்த்தவர்கள் போல் அவர்கள் உத்வேகமாகக்காணப்பட்டார்கள்.

சென்னையிலும், பிற இடங்களிலும் நடந்த பொதுக் கூட்டங்களில் அவர்களே முன் நின்று காவல் காத்தார்கள்.

இப்படி ஒரு சக்தி வருவதை, வளர்வதை காங்கிரஸ் தலைவர் காமராஜ் விரும்பவில்லை. அதை அவரே ஒரு கூட்டத்தில் காட்டிக் கொண்டார்.

''தேசியம் என்றால் இந்தியதேசியம்தான். இதில் தமிழ் தேசியம் என்ன, தெலுங்கு தேசியம் என்ன?'' என்று அவர் கிண்டல் செய்தார்.

ஆயினும் தலைவர் காமராஜருக்கு யாரும் பதில் கூறவில்லை. காரணம், கீழ் மட்டக் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் சம்பத்தோடு ஒத்துழைத்தார்கள்.

தமிழ் தேசியக் கட்சியின் கொள்கைகள் அற்புதமானவை. அது தோன்றிய வேகத்தையும், வளர்ந்த வளர்ச்சியையும், கொள்கைச் சிறப்பையும் ஊன்றிக் கவனித்தால், அதை காங்கிரஸ் கடலில் கரைத்ததே தவறு என்று இன்று தோன்றுகிறது.

அதன் கொள்கைகள் கிட்டத் தட்ட சோவியத் யூனியனின் சமஷ்டி அமைப்பை ஒத்தவை.

விரும்பினால் பிரிந்து போகக் கூடிய மாநிலங்கள், ராணுவம், போக்குவரத்து, தபால், தந்தி, வெளியுறவு — இவை மத்திய அரசாங்கத்தின் கையில் இருக்க வேண்டும்.— இது த. தே. க.வின் கொள்கை.

விரும்பினால் பிரிவது என்பது நினைத்தபடி ஓடுவதல்ல. அது பற்றிய சோவியத் யூனியன் நியதிகளையும் சம்பத் விளக்கியிருந்தார்.

என்னைக் கேட்டால் அந்தக் கொள்கைக் குறிப்பை வாங்கி காங்கிரஸ்காரர்களே கூட இன்று தங்கள் கட்சிக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

எந்த ஊரிலும் தி. மு. க.வுக்குச் சமமாகப் பெருங் கூட்டம் கூடியது, த.தே.க.வுக்குத்தான். த. தே. க. கொடி போட்டு யார் பேசினாலும் அந்தக் கூட்டம் வந்தது.

சம்பத்துக்கு அடுத்தபடியாகக் கட்சித் தோழர்கள் அவனை மதித்ததால், எல்லா ஊர்களிலிருந்தும் அவனுக்கு அழைப்புகள் வரத் தொடங்கின.

அவனுக்கு புது உற்சாகம் பிறந்துவிட்டது.



''ஷூட்டிங்குக்குச் சொன்ன டயத்துக்கு வராத ஹீரோவை கான்ஸல் பண்ணினேன்''

''சரி! டயத்துக்கு வராத ஹீரோயினை என்ன செய்தீர்கள்?''

''மேரேஜ் பண்ணிண்டேன்!''

---

தினசரி பாட்டெழுதக் கூடிய வாய்ப்பிருந்தும், அவன் அடிக்கடி வெளியூர் செல்ல வேண்டியவனானான்.

அப்பொழுது அவனைத் தவிர வேறு ஒருவருமே அந்தத் துறையில் இல்லாததால் படத் தயாரிப்பாளர்கள் அவனுக்காகக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

ஒரு பக்கம் கடன்; மறு பக்கம் அரசியல்; இடையில் பாட்டு — எவ்வளவு சிக்கல்கள் இருந்தால் என்ன? பாடல் எழுத உட்கார்ந்து விட்டால் அவன் சொர்க்கத்தில் மிதப்பான்.

மோபரிஸ் ரோடில் வேலுமணியின் அலுவலகமாக இருந்த அந்தச் சின்னஞ் சிறிய குடிசையில் விஸ்வநாதனின் ஹார்மோனியத்துக்கு முன்னே எழுத உட்கார்ந்தபோது அவனுக்கிருந்த உற்சாகம் சொல்லுந் தரமன்று!

தொண்டிக்குப் பின்னே பிறந்தால், 'அன்பு மகனே' என்று தாலாட்டுவான்? 'ஏன், பிறந்தாய் மகனே?' என்றுதான் ஏங்குவான்!

''நான் பிறந்த காரணமே தெரியவில்லை நீ ஏனடா பிறந்தாய்?'' என்று கதாநாயகன் உருகுகிறான்.

பாட்டெழுதினாலும் படம் பார்த்தாலும் உணர்ச்சிப் பெருக்கில் மிதப்பது அவன் சுபாவம்.

'சிவகங்கைச் சீமை'யில் விட்டுப்போன ஒரு மெட்டு — அந்த மெட்டுக்குப் போடப் பட்ட பாட்டுத்தான் 'தங்கத்திலே ஒரு குறை இருந்தாலும்'.

டைரக்டர் பீம்சிங்கிடம் எப்போதுமே ஒரு அற்புதமான சுபாவம் உண்டு. அவன் என்ன சொல்கிறானோ, அதுதான் பாட்டு; எந்த இடத்தில் போடலாம் என்கிறானோ, அதுதான் இடம். பெரும்பாலும் பாட்டுக்கே இசையமைத்ததால் பாட்டுக்கள் சுத்தமாக இருந்தன.

இந்தச் சூழ்நிலையில் அவன் வாழ்க்கையை அனுபவிப்பதையும் மறப்பதில்லை.

அன்று இரவு தியாகராயநகரில் கண்ணன் பெயர் கொண்ட ஒரு சினிமாக்கம்பெனியில் அவனுக்கு விருந்து.

இரண்டாவது மாடிக் கொட்டகையில் அவன் அமர்ந்திருந்தபோது கையில் மதுவோடு ஓர் அழகான இளம் பெண் உள்ளே நுழைந்தாள்.

(வளரும்)



# பச்சையப்பன் கல்லூரி

COLLEGE CAMPUS

தொகுப்பு: நாயகன்



ஹரி - எதிர் கால நம்பிக்கை

டேபிள் டென்னிஸ்–இது ஹரியின் உயிர் மூச்சு. 1972ல் சென்னை சப்-ஜூனியர்ஸ் நம்பர்–1 ஆகத் தகுதி பெற்ற இவர், 1976ல் அனைத்திந்திய ஜூனியர்ஸில் முதலாம் இடத்தைப் பெற்றார். 1978ல் மோதிலால் நேரு அனைத்திந்தியப் போட்டியில் ரூ. 3000 ரொக்கப்பரிசு கைவசம்; 1975ல் ட்ரினிதாத்தில் நடைபெற்ற விம்பிளி போட்டியில் வெற்றிக் கோப்பை; மற்றும் கொரியா, சைனா, டென்மார்க், எடின்பரோ, டெஹரான் போன்ற பல வெளி நாடுகள் சென்று விளையாடிய வீரர். 'ஹரியின் வெற்றிக்குத் தன்னம்பிக்கையும், ஆட்டத்தில் வெறியும், கல்லூரியின் பேராதரவும்தான் காரணம்' என்று இவரது தந்தை டாக்டர் இராமச்சந்திரன் கூறுகிறார். 'ஹரியின் சகோதரர், இராம்குமார் மீது தான் தாம் நம்பிக்கை வைத்திருந்ததாகவும், தெருவில் சதா கோலி விளையாடிக் கொண்டிருந்த ஹரி இவ்வளவு தூரத்துக்கு வருவான் என்று தாம் எதிர்பார்க்கவில்லை' என்றும் கூறினார்.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பி. காம் மூன்றாவதாண்டு படிக்கும் ஹரி இந்தியாவின் நம்பர்–1 டேபிள் டென்னிஸ் வீரராகத் திகழும் நாள் தொலைவில் இல்லை.

பேட்டி, தலைப்புச் சித்திரம்: - பூஷி தமோரங்

# நிஜங்கள்

"அப்பா ஊரெல்லாம் ஊடு கட்டப் போறார். கேவலம் பீச்சக் காசு பதினைஞ்சு ரூபா கொடுக்க உனக்கென்னடி கேடு?" – டீச்சரோட வார்த்தைகள் என்னை அடித்து வீழ்த்துவது போல் இருந்தது.

பெருமூச்சு விட்டபடி டீச்சரைப் பார்த்தேன். வழக்கமான பன் கொண்டை. நைலெக்ஸ் நைலான் பாலியெஸ்டர் நைலான் நைலான் பிரின்ட் மாட்சிங் சாரி அண்ட் ஸ்லீவ்லெஸ். 365 நாளும் ஒவ்வொரு சாரி. வலது கையில் முக்கால் டஜன் மெல்லிய தங்க வளையல். இடது கை திருஷ்டி பரிகாரம். ஒன்றுமே இல்லை. மேடையில் நிக்கிறப்போ பார்த்தா 'ஷோ கேஸ்' ஞாபகம் வரும்.

"வெளியில் போடி கழுதை! இனி பணம் இல்லாமெ இங்கே வராதே! நிமிரு ஜாஸ்தியாப் போச்சு. ஒட்ட நறுக்கினாத்தான் சரி வரும். போடி."

சொன்னதுமே போறது மரியாதைக் குறைச்சலாத் தோன்றினாலும் 'பரவாயில்லே' என்று கிளம்பினேன்.

இது என்னோட பள்ளிப் படிப்பில் கடைசி வருஷம். வீட்டில் அப்பா இல்லே. ஊர் சுத்தப் போய் இரண்டு மாதமாகிவிட்டது. அம்மா மட்டும் செலவுக்கே திண்டாடும் போது இது வேற என் தண்டம்னு ரொம்ப நாளா தள்ளிப் போட்டுட்டே வந்தேன். இனி தாங்காது.

வீட்டுக்குப் போய் அம்மாவிடம் சொல்லி அழுதேன். சமாதானம் சொல்லிப் பணமும் குடுத்தாங்க. 'வயிறு முட்டத் திங்கப்போறது நீதானே'ன்னு சொன்னதும் வரப்போகும் 'ஸ்கூல் டே'யின் இனிய நினைவுகள் என்னுள் வலம் வந்தன.

ஓரிரண்டு வாரங்கள் சென்றதும் ஆயிரம் ஆர்ப்பாட்டம் செய்த அந்த நாளும் வந்தது.

எல்லாருமே அன்னிக்கு 'இன் அட்ராக்டிவ் கலர்ஸ்'. சின்னஞ் சிறுசு எல்லாமே சாரி கட்டிட்டு வந்தாங்க. நான் வழக்கமான தாவணியோட சுத்திக் கொண்டிருந்தேன்.

டீச்சருங்களோட ஒவ்வொரு நடையும் 'சர்...சர்...' என்று பட்டுப் புடவையோட சத்தத்திலே துள்ளிற்று. ஸ்டாஃப் ரூம் பக்கமா போனேன். ஓரிரண்டு டீச்சரோட மேக்-அப் இன்னும் முடிஞ்ச பாடில்லே.

"ஏய் பேபி! இந்தா! தோ பார் ஸ்வீட்!" கைக் குழந்தைகளோட விளையாடிக் கொண்டிருந்தது ஒன்றிரண்டு மாணவிகள். டீச்சர்களோட குழந்தைகள். 'கிரோ காட்ச்'செல்லாம் எனக்குத் தெரியாமப் போச்சேன்னு வருந்தினேன்.



மைதானத்தில் டெம்பரரியாகப் போட்டிருந்தது ஒரு மேடை. அதைத் தொடர்ந்து நாற்காலிகள். முதல் ரோ ஃபார் டீச்சர்ஸ். அப்புறம் பேரண்ட்ஸ். (முக்கால்வாசி டீச்சரோட வீட்டுக்காரங்க) கடைசியா ஸ்டூடன்ட்ஸ். நானும் கடைசியாப் போய் உட்கார்ந்தேன்.

நெடு நேரமா 'லொட லொடாக்கள்' ஓயவில்லே. 'குர்பானி' இசை பற்றிய உரையாடல் ஒரு புறம். பஸ்ஸில் வந்த குரங்குச் சேட்டை மஸ்தான்கள் பற்றி ஒரு புறம்.

எல்லாமே ஒரு நிமிடம் 'கப்'பென்று நின்றது. தலைமை தாங்க வந்திருந்த அமைச்சர் ஒருவர் நிகழ்ச்சியை ஆரம்பித்து வைத்துப் பேசினார். 'பெண்கள் நன்றுகப் படிக்க வேண்டும்' இதைத் தவிர வேறு என்ன பேசுவார்? ஒரு வழியாய்ப் பார்ட்டி ஆரம்பமானது.

'க்ரோ காட்ச்' இரண்டுமே ஒவ்வொரு தட்டைத் தூக்கிக் கொண்டு வந்தது. அதைத் தொடர்ந்து இன்னும் பத்து ஜட்டம். எட்டிப் பார்த்தேன். லட்டு, கேக், சான்ட்விச், கட்லட், மிக்சர் பாக்கெட்.... கடைசியில் ஐஸ்க்ரீம்.

''ஹெவ் இட் பேபி!'' கெஞ்சிக் கூத்தாடி இரண்டு கையிலும் தட்டு நிறைய தின்பண்டங்களைக் கொண்டு வந்து திணித்தது ஒன்று.

''டீச்சர்! வேண்டாம்னு சொல்லுது உங்க பேபி'' – இன்னொன்று.

''அடிப்பேன். வாங்கிக்கோ. லே தேங்ஸ் டு இஸிஸ்டர்'' மிரட்டி வாங்கிக் கொடுக்கிறார்கள்.

## துடுப்பில்லாப் படகுகள்

இவர்கள்
கண்ணீரைக் கடலாக்கி
கற்பை பாம்மரமாக்கி
வாழ்வுச் சுழலில் சிக்கி
கரைசேரத் துடிக்கும்
துடுப்பில்லாப் படகுகள்!

இவர்கள்
சில பகுத்தறிவுவாதிகளின்
பகுதிநேர பட்டிமன்றத்திற்கான
சில்லறைத் தலைப்புக்கள்!
பெரும்பாலான
கதாசிரியர்களின்
மலிந்துபோன
கதா பாத்திரங்கள்!

இவர்கள்
ஒளியை இழந்த விழிகள்!
மேற்கோளில்லாத
ஆராய்ச்சிக் கட்டுரைகள்!
உயிரில்லாத
உயிர்மெய் எழுத்துக்கள்!
அர்த்தங்கள் புரியாத
செல்லரித்த அகராதிகள்!
அமாவாசை இருளில்
முழு நிலவைத் தேடும்
கார்கால மேகங்கள்!

இவர்கள்
அஸ்தமனமாகிப் போன
இருண்ட வானத்தில்
கதிரவன் உதயம் காணத்
தவம் கிடக்கும்
கணக்கற்ற வெண் தாமரைகள்!

(விதவைகளைப் பற்றிய ஓர் அனுதாபக் கவிதை)

— க. குணசேகரன்



முதல் ரவுண்ட் சர்விஸிங் முடிந்து விருந்தினர், டீச்சர்கள் எல்லாரும் சாப்பிட்டான போது க்ரோ காட்ச் ரெண்டுமே வந்து உட்கார்ந்து கொண்டன.

''என்னடி முடிஞ்சு போச்சா?''

''ஆமாண்டி.''

பகீர் என்றது. யாருக்கும் தெரியாமல் எட்டிப் பார்த்தேன். பேபிகள் எல்லாம் ஐஸ் கிரீமை ஒழுக விட்டுக் கொண்டிருந்தன. என் வாயில் எச்சில் ஒழுகிக் கொண்டிருந்தது. ஒருத்தி எதையோ கொண்டு வந்து தந்தாள். மிட்டாய். ''ஆளுக்கு ஒன்று எடுத்துக்குங்கடி''

கையில் ஒன்றை எடுத்துப் பிரித்தேன். ''உன்னாலே திங்க முடியல்லேன்னு கர்ச்சீஃப்ல வச்சி எடுத்தா'' அம்மா சொல்லி அனுப்பியது ஞாபகம் வந்ததும் மிட்டாயைக்கையில் மடக்கி வைத்துக் கொண்டேன். பதினைந்து ரூபாய்க்கு ஒரு மிட்டாய்!

அமைச்சர் பேசினார். ''மாணவிகளே, உங்களை உற்சாகப்படுத்த சிறப்பாக ஏற்பாடுகள் செய்து வயிறு புடைக்கப் பார்ட்டியும் வைத்துள்ள ஆசிரியர் சங்கத்துக்கு நீங்கள் நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். அதிலும் நான் கலந்து கொண்டதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.''

வயிற்றில் ஏதோ கவ்வியது. எட்டிப் பார்த்தேன். அதே பன் கொண்டை சிரிப்பது தெரிந்தது.

–த. ஜெகந்நாதன்



### புதுமை

''என்ன சார், உங்க பத்திரிகையிலே எல்லா பகுதியும் புதுமை, புதுமைன்னீங்க... ஒன்னேயும் காணுமே!''

''அட நீங்க ஒன்னு நான் புது'மை'யைப் பத்திச் சொன்னேன்!''

### ஏற்றத் தாழ்வு



''வாழ்க்கையிலே என்னே மாதிரி ஏற்றம் இறக்கம் பார்த்தவங்க ரொம்ப ரொம்பக் குறைச்சலா தான் இருப்பாங்க...''

''அப்படியா... எங்க வேலை பார்க்கறீங்க...''

''லிப்ஃட் மேனு வேலை செய்யறேன்!''

— கதா முருகேசன்

# மாதவி வந்தாள்

கதை, வசனம், டைரக்‌ஷன், தயாரிப்பு நாத்திகம் இராமசாமி. படம் கோவிலில் ஆரம்பிக்கிறது. தொடர்ந்து சாயிபாபா வழிபாடு, சுப்ரபாதம் இசை... சரிதான் கடைசியில் செமத்தியா வாரப் போகிறார் என்றுஜாக்கிரதையாக இருந்தால் படம் நமத்துப்போன பட்டாஸாய் வெடிக்காமல் ஏமாற்றுகிறது. எல்லோரும் சொன்ன மனைவி சந்தேகப்படும் கதை. இடைச் செருகலாய் வாழ நினைக்கும் விலைமகள் கதை. கடைசியில் நான்கு பேர் செத்து, செத்து, செத்து விழ, கணவன் மனைவி ஒன்று சேர்கிறார்கள்.

டல்லடிக்கும் விஜய் பாபு. சந்தேக மனைவி வீட்டை விட்டு வெளியேறுகையில் கணவன் 'போ' என்றதும் 'மாட்டேன்' என்று திரும்பும் இடமும், கதாகாலட்சேபம் கேட்டு, மனம் மாறும் இடமும் — வடிவுக்கரசி ஊசிப் பட்டாஸாய் வெடிக்கிறார். குமாரி ராஜி குண்டாக இருப்பது தவிரக் குறை சொல்ல முடியாது.

அவ்வப்போது பொருத்தமாய்ப் பின்னணியில் பழைய டியூன்கள். காந்திமதியும் 'பேரு'க்கு வரும் வி. கே. ஆரும் 'ஏ'யாய் அலைகிறார்கள். வசனம் ஓவர்டோஸ்.

# நதி மறுபடியும் ஓடுகிறது (மலையாளம்)

ஈ படத்தில் சீமா அல்லா!
அடிதடி சண்டைகள் அல்லா!
டிஸ்கோ டான்ஸ்கள் அல்லா!

வாயைத் திறந்து மூக்கின் மேல் விரலை வைக்காதீர்கள். டைரக்‌ஷன் ஐ. வி. சசி.

சோமன் - விதுபாலா குடும்பம் அழகான மெதுவான நதியாய் ஓடிக் கொண்டிருக்கையில் கல் விழுந்தாற்போன்று திருமதி தாமஸ் வருகை பாதிக்கிறது. கணவன் விமான விபத்தில் மரிக்கப் போக, ஏராள இன்ஷியூரன்ஸ் பணத்துடன் (3,00,000 டாலர்) திருமதி தாமஸ் அமெரிக்காவிலிருந்து இந்தியா வந்து ஓர் அநாதை இல்லம் கட்ட காண்ட்ராக்டர் சோமனை நாடுகிறார். இவர்களின் வெள்ளை மன நட்பை, சுற்றியிருக்கும் கூட்டம் கன்னு பின்னு என்று விமர்சிக்க, விஷயம் மஞ்சள் பத்திரிகையில் பச்சையாய் வருகிறது. திருமதி தாமஸ் மீண்டும் அமெரிக்கா திரும்ப சோமன் வாழ்க்கை நதி மறுபடியும் ஓடுகிறது.

சிறந்த நடிகை பரிசு பெற்ற லட்சுமி திருமதி தாமஸாய் ஜமாய்க்கிறார். விலகியிருந்து வீட்டைக் கண்காணிக்கும் அச்சன் டேக்ஸி டிரைவர் ஊரிலிருக்கும் மஞ்சள் பத்திரிகைகளையெல்லாம் வாங்கி எரிக்கும் இடம் மனதில் தங்கிப் போயி. நோக்கலாம்.





## மன்மத ராகங்கள்

படம் ஏதோ குதூகலமாக ஆரம்பிக்கிறது என்று நினைத்தால் பிறகுதான் தெரிகிறது பழைய கள் என்று. நெஞ்சில் ஓர் ஆலயம் பாணி புது மொந்தையில். காதலன்—மனைவி-கணவன் முக்கோணம். வழக்கப்படி காதலன் தியாக மரணம். இந்த முடிவைச் சொல்ல இடைவேளைக்குப் பிறகு இழுஇழு வென்று இழுபறியாட்டம்.

காதலன் அருண்குமார் உணர்ச்சியற்ற நடிப்பு. கணவன் ராஜசேகரின் குருட்டு நடிப்பு ஒரே இருட்டு. நிஷா துருதுரு. ஆளில்லா வீட்டில் அருண் குமாரை அங்கே போ, இங்கே வா என்று மர்மமாய் நாய் விடு தூது மூலம் ஆணையிட்டு, புதுமையாய் 'கவர்' செய்து காதலிக்கும் ஸ்ரீ கீதா.

ராமராவ் தேங்காயைச் சுரண்டுகிறார். நாயும் குதிரையும் சண்டை போட்டு, ஆற்றிலிருந்து மூழ்கியவரைக் காப்பாற்றி ஏதோ செய்கின்றன. நளினி காந்த் வெத்து வேட்டு.

கே. வி. மகாதேவனின் இசையும் பாடல்களும் இனிமை. மீனாட்சி சுந்தரத்தின் கேமரா குளுமை.

## எங்கள் வாத்தியார்

ஒரு எலிமெண்டரி ஸ்கூல் வாத்தியாரின் சிக்கலான வாழ்க்கையைச் சிக்கலில்லாமல் சொல்கிறார் டைரக்டர் துரை. படத்தில் பழைமை நெடி. துரையின் புதுமைக் கலைப் 'பசி' அடங்கி விட்டதோ?

வாத்தியாராய் வந்து படம் பூரா ஆக்ரமிப்பவர் நாகேஷ். மிக இயல்பான குண சித்திர நடிப்பு. மனைவியுடன் ஊடல் சண்டை போட்டு, பழைய மாணவர்களின் (பாத பூஜை) உபசரிப்பில் உருகிப்போய், உதவி கேட்காமல் தவித்து, டென்ஷில் மாட்டிக் கொண்டு விழித்து – மனுஷன் ஸிம்பிளா கொன்னுட்டார்.

காலேஜிலிருந்து கவிதாவைத் தாத்தா வேடத்தில் வந்து அழைத்துப் போகும் விஜய் பாபு மந்த பாபு. வாத்தியாருக்காகவே வியர்வை சிந்தும் ஜூனியர்பாலையா நடிப்பில் சீனியர்.

வி. கே. ஆர்., சுருளி, தேங்காய் எல்லாம் கனகச்சிதம். ஆனால் விரசம் கொஞ்சமும் இல்லை. இன்னொரு தடவை படிக்கவும். விரசம் கொஞ்சமும் இல்லை. சண்டைகள், கொலை, கற்பழிப்பு, ஜெயமாலினி டேன்ஸ் எல்லாம் மிக சாமர்த்தியமான சேர்க்கை.

படம் பூரா ஒரு புறம் சோகமும், மறு புறம் நகைச்சுவையும் கலந்து இழையோடுகின்றன. ஏ. எல். நாராயணனின் அர்த்தமுள்ள வசனங்கள். 'நான் மழைக்குத்தான் ஒதுங்கினேன். நீ முழுசாவே நனைஞ்சுட்டே'. என்று நாகேஷ் ஜெயமாலினியிடம் சொல்லுமிடம் ஒரு சேம்பிள்.

– நளினி சாஸ்திரி



## அத்தியாயம் 70

# போரும் விளைவும்

அன்றிரவு அனந்த் தளத்தில் படுத்திருந்தான். இன்பக் கனவுகள் ஏதேதோ எழுந்தன அவன் உறக்கத்தில். மறுநாள் காலை எழுந்ததும் அவன் ஒரு படகை எடுத்துக் கொண்டு கோட்டைக்குச் சென்றான். அங்கு நீராடிப் புத்துடை அணிந்து வழக்கம்போல் இரு கைத்துப்பாக்கிகளையும் எண்ணெய் கொண்டு துலக்கி, சரிபார்த்து ரவைகளைத் திணித்து இடையில் கட்டிக்கொண்டு புறப்பட்டான். மறுபடியும் படகில் ஏறித் தானே படகைச் செலுத்திக் கொண்டு கடல் ராணியின் துணைக் கப்பல்களைப் பார்வையிட்டான். அவற்றின் தலைமைக் கப்பலிலிருந்த லா பூஷேயிடம் சிறிது நேரம் ஏதோ விவாதித்தான். ''லா பூஷே! என் திட்டத்தைச் சொல்லி விட்டேன். எதிரி நாம் எதிர்பார்த்தபடி போரிடா விட்டால் போர் முறையை நீ மாற்றிக் கொள்'' என்று கூறினான்.

''மாற்ற அவசியம் இருக்காது. மாக்ரே சிறந்த கடல் வீரன். போரில் வல்லவன். ஆனால் பழைய வழக்கங்களின்படி போரிடத் தான் அவனுக்குத் தெரியும்'' என்றான்.

இந்திரஜித் அனந்த் லா பூஷேயை அர்த்த புஷ்டியுடன் நோக்கினான். ''வாட் அபௌட் காஸண்ட்ரா?'' என்று கேட்டான்.

லா பூஷே பதில் சொல்லவில்லை சில விநாடிகள். பிறகு நிர்ணயமான குரலில் சொன்னான். ''டோன்ட் ஒரி. ஐ வில் டூ மை பார்ட் (கவலை வேண்டாம். என் பங்கை நான் செய்கிறேன்)'' என்று.

அத்துடன் அவனுடன் கை குலுக்கிவிட்டுக் கடல் ராணிக்கு அனந்த் வந்தபோது நடுப் பகலாகிவிட்டதால் இரு பெண்களுடனும் உணவருந்திவிட்டுக் கடல் ராணியின் பீரங்கிகளைச் சோதித்தான். ''ராணி! நீ கப்பலை இயக்கு. சாரு! நீ என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று வினவினான்.

''சுக்கான் பிடிக்கிறேன்'' என்றாள் சாரு.

இதைக் கேட்ட அனந்த் அசந்து போனான். ''போரில் கப்பலின் சுக்கானைப் பிடித்துத் தேவைக்குத் தகுந்தபடி திருப்புவது



சுலபமான காரியமல்ல. நீ சிறிது பிசகினாலும் கடல் ராணி பாதிக்கப்படும்'' என்றான்.

''அது தெரியும் எனக்கு'' என்றான் சாரு.

அதற்கு மேல் அங்கு நிற்காமல் துலாஜி யுடனும் சங்கர்பந்துடனும்பேசினான் அனந்த். சங்கர்பந்த் வருகிற போரைப் பற்றிச் சிறிது கவலைப்பட்டார். ''இந்தப் போரில் நாம் வெற்றி யடைந்த பிறகு நாம் இருந்தால் காஸண்ட்ரா கடல் ராணியை அழிக்கும். நாம் தோற்றாலும் ஆபத்துத்தான். மாக்ரே நம்மைச் சிறை செய்வான்'' என்று குறிப் பிட்டார்.

''மாக்ரேக்கும் நமக்கும் ஒப்பந்தம் இருக் கிறது'' என்றான் அனந்த்.

''எந்த ஒப்பந்தத்தையும் முறிக்க ஆங் கிலேயர்கள் தயங்க மாட்டார்கள்'' என்றார் பந்த்.

துலாஜி முடிவில். சொன்னான்: ''போர் முடிந்த பிறகு அதைப் பற்றிப் பேசுவோம். இப்பொழுது அவசரமில்லை'' என்று.

''துலாஜி! நீ பீரங்கிகளைக் கவனித்துக் கொள்'' என்று உத்தரவிட்டான் அனந்த்.

''நீ?'' துலாஜியின் கேள்வி துரிதமாக எழுந்தது.

''நடுப் பாய்மரத்தின் உச்சியில் உள்ள வட்டமான கட்டையில் நிற்பேன். சமயம் வந்ததும் கீழே வருவேன்'' என்று கூறினான்.

''அது அபாயமான இடம். உன்னை யாரும் நினைத் துப்பாக்கி கொண்டு சுட்டு விடலாம்'' என்றான் துலாஜி.

''போரில் எல்லா இடங்களும் அபாய மானதுதான்'' என்று கூறிய அனந்த் தனது நண்பனின் தோளில் கையைப் போட்டுக் கொண்டு கடல் ராணியின் போர் ஏற்பாடு களைக் கவனிக்கலானான்.

மாலை நெருங்கியதும் ராணியும் சாருவும் சராய்களை அணிந்து வெளியே வந்தார்கள். சாரு சுக்கானிருப்பிடம் சென்றான். ராணி தலைவி என்ற முறையில் தனது பணியைக் கவனித்து மாலுமிகளுக்கு உத்தரவுகளைப் பிறப்பித்தாள். கப்பலின் தளத்தில் நடு மையத்திலிருந்த பாய் மரத்தில் சாய்ந்து கொண்டு நின்றாள் போருக்குத் தயாராக.

மாலை வேளை மிக ரம்மியமாக இருந்தது. கதிரவன் சிவந்த பெரும் பழமாகிக் கடலில் மூழ்கச் சமயம் பார்த்திருந்தான். அந்தச் சமயத்தில் மாக்ரேயின் பெரும் கப்பல் பிரிட்டிஷ் கொடியுடன் வட திசையில் காட்சியளித்தது. அவன் துணைக் கப்பல்கள் நான்கு அவன் கப்பலைப் பின்பற்றி வந்தன. மாக்ரே தனது கப்பலின் பாய்களை நன்றாக விரித்திருந்தான். காற்று அவனுக்கு அனு கூலமாகத் திரும்பியதால் மாக்ரே வேகமாக வந்தான். பூர்ணகட்டின் வடமூலைக்கு. அடுத்து தாமதிக்காமல் தனது பீரங்கிகளை இயக்கினான் காஸண்ட்ராவைநோக்கி. அவனை எதிர்கொள்ள டேய்லர் தயாராயிருந்தான். காஸண்ட்ராவின் இரு பீரங்கிகள் பெரும் சத்தத்துடன் கடலையே பிளந்துவிடுவன போல் சப்தித்தன.

மாக்ரே தனது கப்பலில் நின்று கொண்டு



டெலஸ்கோப் மூலம் எதிரியின் கப்பல்களை சந்துஷ்டியுடன் நோக்கினான். அடுத்துத் தனது உத்தரவுகளை உரத்த குரலில் பிறப்பித்தான். மாக்ரேயின் கப்பல் துறைமுகத்தை நோக்கி விரைந்து வந்தது. காஸண்ட்ரா தனது பெரும் பாய்களை விரித்துப் பயங்கரமான கழுகைப் போல் காட்சியளித்தது. காஸண்ட்ரா நகர்ந்தது பெரும் திமிங்கிலத்தைப் போல். அதன் முந்நூற்று எண்பது பீரங்கிகளும் பல யமன்களைப் போல் வாய்களைத் திறந்தன.

காப்டன் ஜேம்ஸ் மாக்ரே, டெய்லர் நினைத்தது போல் துணிவில்லாத பயங்கொள்ளியுமல்ல, கப்பல் போரில் அனுபவமோ திறமையோ அல்லாதவனுமல்ல. முதல் தடவை டெய்லர் மாக்ரேயிடமிருந்து காஸண்ட்ராவைக் கைப்பற்றியது டெய்லரின் சாமர்த்தியத்தால் மட்டுமல்ல. மாக்ரேயுடன் இணைந்து நின்று போராட வந்த துணைக்கப்பல் ஓடிவிட்டதுதான் காரணம். ஆனால், தற்பெருமை மிக்க டெய்லர், மாக்ரேயின் தோல்விக்குக் காரணம் அவன் திறமைக் குறைவும் துணிவுக் குறைவும் என்றே எண்ணியிருந்தான். ஆகவே தன்னைக் கண்டதும் மாக்ரே பயந்து திரும்பி ஓடிவிடுவான் என்று மமதையுடன் அலட்சியமாகப் போரில் இறங்கினான். 'எந்த மனிதனும் சதா ஓடுவதில்லை' என்று ஸில்வர் ஏற்கனவே செய்த எச்சரிக்கைகூட அவன் புத்தியில் ஏறாததால் கால் நாழிகைக்குள் மாக்ரேயின் கப்பல்களைக் கபளீகரம் செய்து விடலாம் என்று உறுதியுடன் காஸண்ட்ராவை மாக்ரேயின் கப்பல்கள் வரிசையாக வந்து கொண்டிருந்த பூர்ணகட் துறைமுகத்தின் வட முனையை நோக்கிச் செலுத்தினான்.

காப்டன் மாக்ரேயும் தனது கப்பலிலிருந்து தூரதிருஷ்டி கண்ணாடி மூலம் டெய்லரின் முன்னேற்றத்தைக் கவனித்தான். அடுத்து காப்டன் ஸாண்டர்ஸையும் லெப்டினண்ட் ஸ்மித்தையும் அழைத்து ''நீங்கள் துலாஜியிடமிருந்து அறிந்து வந்த செய்தி உண்மை தானா?'' என்று வினவினான்:

''முற்றிலும் உண்மை'' என்றான் ஸ்மித்.

''உங்களிடமே நாங்கள் இருடிய கடிதத்தைக் கொடுத்தோம்'' என்றான் ஸாண்டர்ஸ்.

''தென் ஹௌவ் ஈஸ் தட் கடல்ராணி மேகிங் ப்ரிபரேஷன் டு அடாக்? (அப்படியானால் கடல் ராணி ஏன் போருக்குத் தயாராகிறது?)'' என்று வினவினான் மாக்ரே.

''இட் ஈஸ் ஆல் பிரிடென்ஷன். தே ஆர் ஆன் யுவர் ஸைட் (அது வெறும் நாடகம். அவர்கள் உங்கள் பக்கம்தான்)'' என்ற ஸ்மித் ''இட் ஈஸ் இன் த லெட்டர் (அதுதான் உங்கள் கடிதத்தில் இருக்கிறதே)'' என்றும் சான்று காட்டினான்.

காப்டன் மாக்ரே அதற்கு மேல் ஏதும் பேசவில்லை. அவர்கள் கொண்டு வந்த கடிதம் தான் ஏற்கனவே விஜயதுர்க்கத்தில் கடல் ராணியுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தின் நகல் என்பதைப் புரிந்து கொண்டதால் ஸாண்டர்ஸின் கண்ணிலும் ஸ்மித்தின் கண்ணிலும் மண்ணைத் தூவ துலாஜியோ அனந்தோ செய்த தந்திரம்தான் அது என்பதை உணர்ந்து கொண்டு ''சரி போய் பீரங்கிகளைக் கவனியுங்கள். என் உத்தரவுகளைச் சரியாக நிறைவேற்றி இம்முறையாவது நல்ல பெயரெடுங்கள்'' என்று கண்டித்துச் சொல்லிவிட்டுப் போருக்கான உத்தரவுகளைப் பிறப்பிக்கலானான். தனது உப தலைவனை மார்ச் என்பவனை அழைத்து ''நமது கப்பலின் பக்கவாட்டை காஸண்ட்ராவுக்காகத் திருப்பு. காஸண்ட்ரா அருகில் வந்ததும் பக்க பீரங்கிகள் அனைத்தாலும் குண்டுகளை மும்முறை இடைவிடாமல் வீசு. டோண்ட் டேக் மச் டைம் டு ரீ லோட் த கன்ஸ் (பீரங்கிகளில் குண்டுகளை மறுபடியும் திணிக்க அதிக நேரம் எடுத்துக்கொள்ளாதே)'' என்று கூறிவிட்டுத் தளத்தின் மேல் பகுதிக்குச் சென்றான்.

காஸண்ட்ரா நேராகத் தன்னை நோக்கி வருவதை உணர்ந்த மாக்ரே அது போரைத் துவங்கட்டும் என்று காத்திருந்தான். குண்டுகளை வீணாக அடிப்பதிலோ நஷ்டப்படுவதிலோ மாக்ரே நம்பிக்கை இல்லாதவன். தவிர காற்று எதிரியைவிடத் தனக்கு அனுகூலமாயிருப்பதையும் உணர்ந்ததால் மிக லாகவமாகத் தனது கப்பலை இயக்க முடியும் என்பதை உணர்ந்திருந்தான். ஆகவே காஸண்ட்ராவின் இரு பீரங்கிகள் தனது கப்பலை நோக்கி வெடித்தவுடன் கப்பலின் பக்கத்தைக் காஸண்ட்ராவை நோக்கித் திருப்பவே ஐம்பது பீரங்கிகள் காஸண்ட்ராவை நோக்கிச் சீறின. குண்டுகள் காஸண்ட்ராவின் பக்கப் பலகைக்கு அதிக சேதம் விளைவிக்காவிட்டாலும் அதன் முனையைச் சிறிது உடைக்கவே செய்தன.

டெய்லர் எதிரியின் போர் முறையை, நொடிப் பொழுதில் ஊகித்துக் கொண்டதால் மாக்ரேயின் கப்பலை விட்டு மாக்ரேயின் துணை கப்பல்களைத் தாக்கினான். அவற்றில் இரண்டு காஸண்ட்ராவின் பீரங்கி வீச்சைத் தாங்க முடியாமல் தள்ளாடின.

அந்த சமயத்தில் மாக்ரே கொடிகளைக் கொண்டு மற்ற கப்பல்களுக்கு ஏதோ சைகை செய்ய அவை மாக்ரேயின் கப்பலைத் தொடர்ந்து மேல் திசையை நோக்கித் திரும்பின. ''த கவர்ட்! ஹி வாண்ட்ஸ் டு ரன் (கோழை! ஓடப் பார்க்கிறான்)'' என்று சபித்தான் டெய்லர் தனது தளத்திலிருந்து. அதன் விளைவாக காஸண்ட்ராவை மீண்டும் பின்னடையச் செய்து, பிறகு மாக்ரே எதிர்பாராத சமயத்தில் தாக்கலாம் என்று நினைத்

---

''கங்கிராட்ஸ்! இன்று முதல் நீங்கள் சுதந்திரப் பறவை!''

''எப்படி சொல்கிறீர்?''

''மானேஜர் உங்களை டிஸ்மிஸ் செய்திருக்கார்!''





"கஷ்டப் படறீங்க! பீரோவிலே ஏதோ சாடு கரைதான் வச்சுப் பூட்டிருப்பாங்கன்னு வந்தா ரூபாயும், நகையுமல்ல வச்சிருக்காங்க...!"

- ஸ்ரீ. கப்பா ராவ்

தான். ஆனால் துறைமுகத்திலிருந்த கடல் ராணி, அனந்த் முதலில் நிர்ணயித்த திட்டத்தின்படி மத்ஸ்யகந்தி நதியின் முகத்துவாரத்தையும் பூர்ணகட் துறைமுகத்தையும் அடைத்துக் கொண்டது.

அதைக்கண்டதும் டெய்லர் இங்கலண்டை அழைத்து "ஸீ தட். அனந்த் ஹாஸ் டர்ன்ட் ட்ரைய்டர் (அதோ பார். அனந்த் துரோகியாகிவிட்டான்") என்று துறைமுகத்தை அடைத்துவிட்ட கடல்ராணியைச் சுட்டிக் காட்டினான்.

"ஹி ஈஸ் நோ ட்ரெய்டர். திஸ் வாஸ் த பிளான் அக்ரீட் டு (அவன் துரோகியல்ல. இந்தத் திட்டம் நம்மால் ஒப்புக்கொள்ளப் பட்டது)" என்று இங்கலண்ட் சுட்டிக் காட்டினான்.

"டாம் திஸ் ப்ளான். ஐ வில் ஷோ வாட் டெய்லர் ஈஸ் (மண்ணாங்கட்டித் திட்டம். டெய்லர் யாரென்பதைக் காட்டுகிறேன்)" என்று சீறியடெய்லர், "பாய்ஸ்! டு ஆக்ஷன்" என்று கூவிக்கொண்டு காஸண்ட்ராவை மாக்ரேயை நோக்கி மீண்டும் திருப்பினான்.

சுமார் ஒரு மணி நேரத்துக்கு மேல் நடந்த போர் அப்பொழுதும் மும்முரமான நிலைக்கு வராததால் இனி தாமதிப்பதில் பயனில்லை என்று கதிரவன் கடலில் மூழ்கி இருளும் கவிந்தது. கோட்டையில் விளக்குகள் எரிந்தன. கடல் ராணியிலும் மற்றக் கப்பல்களிலும் பாய்மர லாந்தர்களும் பந்தங்களும் எரிந்தன.

பூர்ணகட்டின் எதிரிலிருந்த அரபிக்கடல் பிராந்தியம் பன்னிரண்டு ஆபரணங்களை அணிந்த அழகுள்ள அணங்கு போல் காட்சியளித்தது.

துறைமுகத்தை அடைத்து நின்ற கடல் ராணி துறைமுகத்துக்கு அழகு செய்தது. எட்ட லா பூஷேயின் தலைமையில் வளர்ந்து கொண்டிருந்த ஐந்து துணைக் கப்பல்கள் போரை வேடிக்கை பார்ப்பன போல விளக்குக் கண்களைச் சிமிட்டின. சற்றே போரிலிருந்து அகன்றதாகப் போக்குக் காட்டிய மாக்ரே தனது ஐந்து கப்பல்களுடன் சர விளக்குகள் போல் புகுந்து கொண்டிருந்தான், கடல் ராணி, காஸண்ட்ரா இவற்றுக்கும் கடல் ராணியின் ஐந்து துணைக் கப்பல்களுக்கும் இடையில். மாக்ரே வந்த போது இரு புறமும் குண்டுகளை வீசிக் கொண்டே வந்தான். காஸண்ட்ராவின் பெரும் குண்டுகள் சீறின. ஆனால் அதிக எடையினால் மட்டுமில்லாமல் அடியில் பிடித்திருந்த பாசியின் எடையாலும் அதன் வேகம் சற்றுக் குறைவாகவே இருந்தபடியால் டெய்லரால் கப்பலை இஷ்டப்படி திருப்ப முடியவில்லை. கிட்டத்தட்ட நின்றே போராட வேண்டியதாயிற்று. இருப்பினும் டெய்லர் நிதானத்தைஇழக்காமல் போராடினான். இருமுறை மாக்ரேயை நெருங்க முயன்றான். மாக்ரே அகப்படாமல் திரும்பி விட்டதால் கடல் ராணியின் குண்டு ஒன்று காஸண்ட்ராவின் தளத்தில் விழுந்தது.

டெய்லர் நிதானமிழந்தான். டெலஸ்கோப்பின் மூலம் கடல் ராணியை நோக்கினான். அதன் தளத்தில் அனந்தும் இல்லை துலாஜியும் இல்லை. கடல் ராணியான ரத்னா மட்டும் டெலஸ்கோப்பால் காஸண்ட்ராவைக் கவனித்துக் கொண்டிருந்தாள். சாருக்கான் சக்கரத்தை இயக்கிக் கொண்டிருந்தான்.

கடல் ராணி திடீரென்று ஏதோ உத்தரவு பிறப்பித்தாள். ஒரு குண்டுவேகமாக காஸண்ட்ராவின் பாய்மரமொன்றில் பாய்ந்து அதை நொறுக்கி விட்டது. டெய்லர் மீண்டும் குண்டு வந்த திசையை நோக்கினான். அது கடல்ராணியின் பக்கவாட்டுத் துளைகளிலிருந்து வரவில்லை. தளத்திலிருந்த பீரங்கியிலிருந்து வந்தது. அந்தப் பீரங்கியை அனந்த் இயக்கிக் கொண்டிருந்தது டெய்லருக்கு நன்குகத் தெரிந்தது. அவன் அதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தபோது துலாஜி சற்றுத் தூரத்திலிருந்து இயக்கிய பீரங்கியொன்று டெய்லருக்குக் குறிவைக்கப்பட்டிருந்தது. டெய்லர் சரேலெனத் தரையில் படுத்தான்.

அவன் எழுந்தபோது கடல்ராணி துறைமுகத்தை அடைக்கவில்லை. மாக்ரேயின் கப்பலை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. அதற்கு எதிர்த் திசையிலிருந்து லா பூஷேயின் ஐந்து கப்பல்கள் துரிதமாக வந்தன மாக்ரேயை நோக்கி. அவற்றின் முதல் கப்பலில் பாய் மரத்தில் சாய்ந்து டெலஸ்கோப்பால் சுற்றும் கவனித்துக் கொண்டிருந்த லா பூஷே வழக்கப்படி யுத்த குதூகலத்தால் நகைத்துக்கொண்டிருந்தான். நாற்புறத்திலும் அந்தக் கப்பலிலிருந்த பந்தங்கள் ஏதோ பேய் சிரிப்பது போன்ற பயங்கரத்தை அவன் முகத்துக்கு அளித்தன. அடுத்த கணம் அவனுடைய தலைமையில் சீறிவந்த ஐந்து கப்பல்களிலிருந்த மாலுமிகள் பெருங் கூச்சல் போட்டார்கள். பீரங்கிகளும் சாதாரணத் துப்பாக்கிகளும் பயங்கரமாகச் சப்தித்தன. லா பூஷேயின் வேகத்தால் தேங்கி விட்ட மாக்ரேயின் ஐந்து கப்பல்களில் மூன்று கப்பல்களின் பாய்மரங்களை லா பூஷே சுட்டுத் தள்ளிவிட்டான். அவற்றில் இரண்டு கப்பல்கள் மெள்ள மூழ்கிக் கொண்டிருந்தன.

இந்த அபாய நிலையிலும் மாக்ரே அசையவில்லை. தனக்குத் துணை வரவேண்டிய கடல் ராணியின் துணைக் கப்பல்கள் தனது கப்பல்களைத் தாக்க வேண்டிய காரண

மென்னவென்றுஎண்ணினான். ஏதோ பெரும் சூது நடந்திருக்கிறது என்று எண்ணி ஒரு பெரிய விளக்கை எடுத்து பாய் மரமொன்றின் மீது ஏறி வடக்கே ஆட்டிவிட்டு இறங்கினான். அடுத்து கடல் ராணியை நோக்கி வந்தான்.

கடல் ராணி அவனைச் சந்திக்கவில்லை. காஸண்ட்ரா மீது குண்டுகளை வீசியது. எங்கும் குண்டுகளின் புகை அரபிக் கடலின் அந்தப் பகுதியைச் சூழ்ந்து கொண்டது. கடல்ராணி டெலஸ்கோப்பை மடியில் சொருகிக் கொண்டு அனந்தின் பக்கத்திலிருந்த பீரங்கியொன்றை இயக்கி மாக்ரேயின் பாய்மரமொன்றைத் தீக்கிரையாக்கினாள். அதனால் வெகுண்ட மாக்ரே கடல் ராணியை நெருங்க முற்பட்டான். இடையே காஸண்ட்ரா புகுந்தது. டெய்லர் கடல் ராணியை நெருங்கி வந்து தனது நீண்ட துப்பாக்கியால் சுட்டான், சுக்கான் சக்கரத்தை நோக்கி. ரவை சாருவின் தோளில் பாய்ந்தது. அவள் கையில் ரத்தம் குபீரி எடுத்துப் பெருகியது. அதைக்கண்ட அனந்த் அவளைத் தூக்கிக் கொண்டு தலைவி அறைக்குச் சென்றான். காயத்துக்கு ஏதோ சிகிச்சை செய்துவிட்டுத் திரும்பிச் சுக்கானைத் தானே திருப்பலானான்.

டெய்லர் திகைத்தான். அந்தச் சமயத்தில் வில்வர் ஓடிவந்து வடக்கே வந்துகொண்டிருந்த புது ஐந்து பிரிட்டிஷ் கப்பல்களைக் காட்டி, ''தே ஆர் பிரிட்டிஷ். மாக்ரே ஹாஸ் கம் வித் டென் ஷிப்ஸ். ஹீ ஹாஸ் ஷோன் ஒன்லி பைவ் இன் த பிகினிங் (அந்தக் கப்பல்கள் பிரிட்டிஷ். மாக்ரே பத்துக் கப்பல்களுடன் வந்திருக்கிறான். ஆனால் ஐந்து கப்பல்களைத்தான் முதலில் காட்டினான்)'' என்று கூறினான்.

இங்கலண்டு பீரங்கிகளை விட்டு ஓடி வந்தான். ''டெய்லர் வீ ஆர் அவுட்மானுவேர்ட் (டெய்லர்! எதிரிகள் நம் சக்தியை மீறிவிட்டார்கள்.)'' என்று கூறினான்.

''வாட் டு யூ அட்வைஸ் (நீ என்ன சொல்கிறாய்?)'' என்று கர்ஜித்தான் டெய்லர்.

''வீ ஹேவ் டு எஸ்கேப்'' என்றான் வில்வர்.

''வாட் அபௌட் த டு லாக்ஸ் அண்ட் த டைமண்ட்ஸ் மாக்ரே காரீஸ்! (மாக்ரே கொண்டு வந்திருக்கும் இரண்டு லட்ச ரூபாயும் வைரங்களும் என்ன ஆவது?)'' என்று கேட்டான் டெய்லர்.

---

''விலைவாசியெல்லாம் மருந்துக்குக்கூட குறையலேன்னு வருத்தப்பட்டீங்களே...''

''ஆமாம்...''

''அதான் ஒரு சில மருந்துகளோட விலைகளைக் குறைக்கப் போறாங்களாம்!''

— எஸ். எம். சத்குணம்



---

''டாம் த லாக்ஸ் டெய்லர்! வீ மஸ்ட் ஸேவ் காஸண்ட்ரா (லட்சங்கள் ஒழியட்டும். காஸண்ட்ராவைக் காப்பாற்றியாக வேண்டும்)'' என்ற வில்வர், ''டெய்லர்! ஐ வில் டர்ன் அண்ட் மூவ் த ஷிப் ஸௌத். விண்ட்ஸ் ப்ளோயிங் தட் வே (இந்தக் கப்பலை நான் தெற்குத் திசைக்குத் திருப்பப் போகிறேன். காற்று அந்தப்பக்கமாக அடிக்கிறது)'' என்றும் சொல்லிவிட்டு சுக்கானிடம் சென்று சக்கரத்தை வேகமாகத் திருப்பினான். காஸண்ட்ரா வேகமாகத் திரும்பிப்பாய் விரித்து ஓடியது இரு புறமும் தனது பீரங்கிகளைப் பிரயோகித்துக் கொண்டே.

கடல் ராணி அதைப் பார்த்து நகைத்தாள். மீண்டும் அனந்த் பீரங்கி கொண்டு மற்றுமொரு பாய்மரத்தை உடைத்தான். தீப்பற்றிய பாய்களுடனும் உடைந்த பாய்மரங்களுடனும் காஸண்ட்ரா தனது முந்நூற்று எண்பது பீரங்கிகளையும் வீசிக் கொண்டே பயங்கரமாக நுழைந்து விரைந்தது தெற்கு நோக்கி. அனந்த் குறிப்பிட்டது போல அதன் வேகம் அதிகமில்லையென்றாலும் குண்டு வீச்சு பலமாயிருந்ததால் மற்ற கப்பல்கள் அதை அதிகமாக நெருங்கவில்லை.

சற்று கிட்டே இருந்த கப்பல் கடல் ராணி ஒன்றுதான். காஸண்ட்ரா அருகில் வந்தபோது அதன் இன்னொரு பாய்மரத்தையும் தீர்த்துவிட அனந்த் பீரங்கியைக் குறி வைத்தான். ராணி அவனை நெருங்கி ''வேண்டாம். நிறுத்துங்கள்'' என்றாள்.

''ஏன்?''

''அது சிறந்த கப்பல். அதை நாசம் செய்ய வேண்டாம்.'' என்றாள். வேறு காரணங்கள் அவளுக்கு இருந்தாலும் அதை அவள் வெளியிடவில்லை.

''காஸண்ட்ரா ஓடுவதைப் பார்த்ததும் மாக்ரே புதிதாக வந்த தனது ஐந்து கப்பல்களுடன் அதைத் தொடர்ந்தான். இடைபுகுந்த வாபூஷே அவற்றிலும் இரண்டைச் சேதப்படுத்தி விட்டான்.

நள்ளிரவுவரை நடந்த பயங்கரப் போரின் விளைவுகள் விபரீதமாக இருந்தன. உடைந்த கப்பல்களின் பலகைகள் எங்கும் அலைகளில் மிதந்து கொண்டிருந்தன. மாண்ட மாலுமிகளின் பிணங்களைச் சுறாக்கள், இழுத்துக் கொண்டு மறைந்தன. இரண்டு கொடி மரங்கள் அலைகளால் உருட்டப்பட்டு பூர்ணகட் துறைமுகத்துக்குள் நுழைந்து கொண்டிருந்தன. அவற்றிலொன்றைப் பிடித்துத் தப்ப எண்ணி மாண்டுவிட்ட மாலுமியொருவனின் பிணம் அதன் மீது நீண்டு கிடந்ததால் மரத்துடன் அந்தச் சடலமும் துறைமுகத்துக்குள் சென்று கொண்டிருந்தது.

போர் முடிந்து விட்டதன் காரணமாக கடல் ராணியின் தளம் சுத்தம் செய்யப்பட்டுக் கொண்டிருந்தது. நாழிகைகள் ஓடின. பூர்ணகட்டின் போர் பயங்கரத்தின் விளைவுகளை முற்றிலும் விளக்க அருணன், தனது செவ்விய கிரணங்களை அரபிக் கடல் மீது வீசினான்.

(தொடரும்)

# முக்கியத்துவம் முறைகளுக்கல்ல நெறிகளுக்கே!

நாடாளுமன்ற முறை ஜனநாயகமா ஜனாதிபதி தேர்வு முறை ஜனநாயகமா எது சிறந்தது? — விவாதம் நடத்தக் கோருகிறார் பிரதமர்.

இது தொடர்பாக அரசியல் சாசனச் சட்டத்தில் எம். எல். தேறி, சென்னை சட்டக் கல்லூரியில் ஏழாண்டு அரசியல் சாசன சட்டப் போதிப்பாளராக விளங்கி, தற்போது சென்னை உயர்நீதி மன்றத்தில் பணியாற்றி வரும் திறமையாளரான இளம் வழக்கறிஞர் திரு வி. செல்வராஜ் அவர்களைச் சந்தித்துப் பேசியபோது:

எந்த முறை ஜனநாயகமானாலும் அதற்காக எதிர்பார்க்கப்படும் அடிப்படை நெறிகள் சரியாகப் பின்பற்றப்படும்வரைதான் அம்முறை சரியாக இயங்கும்.

1977 முதல் 1980 வரை உள்ள ஒரு சிறு கால அளவைத் தவிர சென்ற 15 ஆண்டுகளுக்கு மேலாக திருமதி இந்திரா காந்திதான் பதவியில் உள்ளார். அவர் மட்டுமே பெரும்பாலான அதிகாரத்தையும் பெற்றுள்ளார்.

கட்சியிலும் ஆட்சியிலும் பெரும்பான்மை பலம் பெற்று ஆட்சி செய்யும் நிலையிலும் அவரால் இன்றைய தலையாய பிரச்னைகளான வேலையில்லாத் திண்டாட்டம், விலைவாசிகளின் அதீத உயர்வு, முக்கிய பண்டங்களின் பற்றாக்குறை, இந்தியாவின் கிழக்குப் பகுதிகளில் கிளர்ச்சி போன்ற சமுதாய இன்னல்களைத் தீர்க்க முடியவில்லை.

இந்நிலையில் ஜனாதிபதி அடிப்படை நிர்வாகம் கொண்ட அரசு முறையைப் புகுத்துவது பற்றிச் சிந்திப்பது தேவையற்ற பிரச்னை. முக்கிய துறைகளில் தற்போதைய அரசுக்குள்ள இயலாமைகளை மக்கள் காணாதிருக்க அவர்கள் கவனத்தைத் திசை திருப்பவே இம்மாதிரி திருமதி இந்திரா காந்தி செயல்பட்டிருக்கிறார் என்பது என் அபிப்பிராயம்!

அமெரிக்க ஆட்சி முறைப்படி ஒருவர் அதிகபட்சம் இரண்டுமுறை (4 = 4 + 8 ஆண்டுகள்) தான் ஜனாதிபதியாக இருக்க முடியும். ஜனாதிபதி, காங்கிரஸ், செனட் என்ற மூன்று பகுதிகளைக் கொண்டு அமெரிக்க அரசு நடக்கிறது. மக்களின் கூர்மையான கண்காணிப்பு, பத்திரிகை சுதந்திரம், அரசு குறுக்கீடு இல்லாத நீதித் துறை ஆகியவை அங்கு இருப்பதால் அமெரிக்க அரசு முறை சிறப்பாக இயங்குகிறது.

அமெரிக்கா போன்றோ, இங்கிலாந்து போன்றோ பொதுமக்கள் அபிப்பிராயம் போதிய அளவு வலுப்பெறாத நிலையில், பத்திரிகைகளும், நீதித் துறையும் கட்டுப்பாட்டுக்குள் வரக்கூடிய தற்போதைய நம் நாட்டு சூழ்நிலையில் ஜனாதிபதி அடிப்படை அரசு முறை கொண்டு வருவது சரியானதாக எனக்குப் படவில்லை!

மந்திரி சபை அடிப்படை அரசு முறையில் கூட நமது பிரதமர் ஆட்சி செய்வதாக எனக்குப் படவில்லை. மந்திரிகள் பிரதமரின் செயலாளர்கள் போன்று செயல்படுவதாகத் தோன்றுகிறது.

சட்டமும் சமுதாயமும்



வி. செல்வராஜ்

சமீபத்தில் மந்திரி சபை அடிப்படை அரசு முறையிலிருந்து ஜனாதிபதி அடிப்படை அரசு முறைக்கு மாறியிருக்கும் ஸ்ரீலங்காவிலோ அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டு, பஞ்சாயத்துக்களில் கூட சுயாட்சி நடத்தும் அளவுக்கு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. மாறாக, மந்திரி சபை அடிப்படை அரசுமுறை கொண்ட நம் நாட்டு நிர்வாகத்திலோ பிரதமர் வசம் மொத்த அதிகாரங்களும் குவிக்கப்பட்டுள்ளன. இதனால் ஜனநாயகம் கேலிக் கூத்தாகிவிட்டது.

ஜனாதிபதி அடிப்படை அரசு முறை கொண்டு வருவதால்தான் நம் நாட்டுக்குக் கதி மோட்சம் பிறக்கும் என்று நமது பிரதமர் தீர்மானமாக நம்புவாரேயானால் அதனைச் செயலாக்கக் கீழே சொல்லப்பட்ட முறைகளை அவர் அனுசரிக்க வேண்டும். இவ்விதம் நடப்பாரேயானால் அவரது எண்ணம் சுயநலனை உள்ளடக்கியதல்ல, தேச நலன் அடிப்படையிலானது என்று நாம் கருத முடியும்.

(1) தற்போதைய அரசு உடனடியாக ராஜினாமாச் செய்ய வேண்டும்.

(2) ஹிதயத்துல்லா போன்று கட்சிப் பற்றற்ற ஒரு மேதையைத் தலைவராகக்கொண்டு அனைத்துக் கட்சிகளை உள்ளடக்கிய தேசிய அரசு நியமிக்கப்பட வேண்டும்.

(3) தேசிய அரசு தேர்தல்கள் நடத்தி அரசியல் நிர்ணய சபையை மக்கள் தேர்ந்தெடுக்கச் செய்ய வேண்டும்.

(4) இந்த அரசியல் நிர்ணய சபை ஜனாதிபதி அடிப்படை அரசை ஏற்படுத்தும் விதமாகப் புதிய அரசியல் சாசனத்தை உருவாக்க வேண்டும்.

இவற்றையெல்லாம் இந்திரா காந்தி நினைவில் கொண்டு செயல்படுவாரா?

பேட்டி: பி. ரங்கநாயகி

''தேவை. பி. ஏ. பட்டம் பெற்று நாவிற்கு ரஞ்சகமாகச் சமையல் செய்யக் கற்றுக்கொண்டும், தற்கால நாகரிகத்தை அளவுடன் புரிந்துகொண்டும், இருபது வயதை எட்டிப் பிடிக்கக் காத்திருக்கும், அழகு மிக்க யுவதிக்குப் பொருத்தமான ஒரு மாப்பிள்ளை தேவை. இருபத்தி ஏழு வயதுக்கு மேற்படாமல் சராசரி உயரத்துடன் மாதம் ஐநூறு ரூபாய்க்கு மேல் நிரந்தர உத்தியோகத்தில் இருக்கும் இளைஞர்கள் தங்கள் விவரங்களை அனுப்பவும். ஜாதகப் பொருத்தத்தை விட மனப் பொருத்தம்தான் முக்கியம். போட்டோவும் கூட இருந்தால் உசிதம். தபால் பெட்டி எண் ஒன்பதினாயிரம். இனைத் துணைவன் பத்திரிகை மேற்பார்த்து. சென்னை.''

அறுபத்தி ஐந்து ரூபாய் சில்லறையைக் கொடுத்து இந்த ஐந்து வரிப் பொடி எழுத்துக்கள் யார் கண்களிலாவது பட்டு நல்ல இடம் அமையாதா என்ற ஏக்கத்துடன் பெண்ணைப் பெற்றவர் மேற்கொண்டு எத்தனையோ அறுபத்தி ஐந்து ரூபாய்களைச் சேர்க்க முற்படுகிறார்.

''அன்புடையீர், ராமசாமி என்ற பெயருள்ள அடியேனுக்கு வயது இருபத்தி ஐந்தரை. மாத வருமானம் நானாவித பஞ்சப் படிகள் உட்பட அறுநூற்றி முப்பது ரூபாய் எழுபது காசு. அசைக்க முடியாத — பூகம்பத்தால் கூடத்தான் — ஒரு ஸ்தாபனத்தில் பெர்மெனென்ட் உத்தியோகம். சம்பள, வயது, உத்தியோக சான்றிதழ்கள், மூந்தாநாள் எடுத்த புகைப்படம், என் குடும்பத்தைப் பற்றிய ஒரு சென்ஸஸ் குறிப்பு, என் முன்னோர்கள் பற்றிய சரித்திரக் குறிப்பு எல்லாம் இக்கடிதத்தின் கூடவே வருகின்றன. அடுத்த வெள்ளிக் கிழமை பிற்பகல் நானும் என் தகப்பனாரும் சென்னைக்கு வேறு ஜோலியாக வரவேண்டியிருக்கிறது. அன்று மாலை ஆறு மணி சுமாருக்கு உங்கள் வீட்டில் எட்டிப் பார்க்க நீங்கள் ஆட்சேபணை எழுப்ப மாட்டீர்கள் என்று நம்புகிறோம். நிச்சயமாக நாங்கள் காப்பி டிபன் சாப்பிட மாட்டோம். ஆகையால் எந்தவித ஏற்பாடுகளும் தேவையில்லை. உங்கள் பெண்ணும் அலங்கரித்துக்கொள்ள அதிகநேரம் கண்ணாடி முன் நிற்க வேண்டிய அவசியமில்லை. இயற்கையாக இருந்தால் போதும். என் தந்தை என் தாயாராகப் பிற்காலத்தில் வரவிருந்த யுவதியை இந்த முறையில் தான் பார்க்கப் போனாராம். அதை மாற்ற அவர் விரும்பமாட்டார். பழைய காலத்தவர் என்பதை விட பிறருக்குச் சிரமம் கொடுக்க விரும்பாதவர் என்றே நீங்கள் அவரைப் புரிந்து கொள்ளலாம். மற்றவை நேரில்'' என்று ராமசாமி என்ற வருங்கால மாப்பிள்ளை தன் மனுவைக் குறித்த காலத்தில் சமர்ப்பித்துவிடுகிறான்.

அவன் கடிதத்தில் கண்ட வரிகளின் கவர்ச்சியை விட அவன் புகைப்படத்தில் கவர்ச்சி அதிகமாகவே இருந்தது என்று நினைக்க வைக்கிறது. ''ஆஹா'' என்று பெண்ணுக்கு அப்பா பதில் எழுதுகிறார்.

வியாழக்கிழமையன்று மாலை சுமார் ஆறு மணிக்கு ஒரு நடுத்தர வயதுக்காரரும் ஒரு இளைஞனும் தெருவில் வீட்டு நம்பர்களைக் கவனித்துக் கொண்டே பதினேழாம் நம்பர் வீட்டுக்கு வருகிறார்கள். அந்த வீட்டு வாசலில் கல்யாணப் பெண் சர்வ சாதாரண வாயில் புடவையில் எந்தவித மேக்-அப்பும் இல்லாமல் பூக்கார ஆயாவுடன் பேரம் செய்து கொண்டிருக்கிறாள். அந்தப் பேரம் முடியும்வரை சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்த அப்பாவும் பிள்ளையும் சற்று நெருங்கி மாப்பிள்ளை வேட்டை விளம்பரம் கொடுத்தவரின் பெயரைச் சொல்லி விசாரிக்கிறார்கள்.

''அப்பா இன்னும் ஆபீசிலிருந்து வரவில்லையே! யார் தேடினார்கள் என்று சொல்ல? உள்ளே வாருங்களேன்.''

''உயரம், தோற்றம், கலர், குரல், பணிவு எல்லாம் ஓ.கே'' என்று கிசுகிசுக்கிறார் பெரியவர் இளைஞனிடம். ''ஓ.கே'' என்ற அதே பதில் கிசுகிசுப்பு.

வெள்ளிக் கிழமை வருவதாகச் சொன்னவர்கள் இப்படி நோட்டீஸ் கொடுக்காமல் வியாழக் கிழமை வருவார்கள் என்ற



யோசனை அந்தப் பெண்ணுக்கு எழவில்லை. வேறு யாரோ என்றிருக்கிறாள்.

பெண் வேறு யாராகவும், அதாவது கல்யாணப் பெண்ணுக்குத் தங்கையாக இருந்துவிடக் கூடாதே என்று வந்தவர்களுக்குச் சந்தேகம் தோன்றுகிறது. ''நீ மோகனா தானே?'' என்று பெரியவர் ஏதோ குறி கேட்கும் பாவத்துடன் கேட்கிறார்.

''ஆமா மாமா! உள்ளே வாருங்கள்'' என்கிறாள் அவள். யாராவது தூரத்து உறவினர்களோ என்ற நினைவு எட்டிப் பார்க்கிறது. கிட்ட நெருங்கி வந்து கொண்டிருக்கும் உறவு என்று அவளுக்கு இன்னமும் தோன்றவில்லை. உள்ளே போகத் திரும்புகிறாள்.

''இந்தாம்மா மோகனா! நாங்க வந்த காரியம் திருப்திகரமாகவே முடிந்து போச்சு! நாளைக்கு வருவதாகச் சொல்லியிருந்த மதகுபட்டி ரங்கசாமியுடன் பிள்ளை இன்றைக்கே வந்துட்டார். பெண்ணைப் பிடித்திருக்கு என்று சொன்னார். அடுத்த வாரம் முழுவதும் அவர் மதகுப்பட்டியில் தான் இருப்பார். மேற்கொண்டு பேசலாம் என்று உன் அப்பாவிடம் சொல்! அடேடே! முக்கியமான விஷயத்தைச் சொல்ல மறந்துட்டேன்! இவன்தானம்மா கல்யாணப் பையன் ராமசாமி! போட்டோவில் இருக்கிற ஆசாமியேதான்! ஆள் மாறாட்டமில்லை. நான் வரட்டுமா?....'' பெரியவர் சிரித்துக் கொண்டே பேசுகிறார்.

''எங்க அம்மாவைப் பெண் பார்க்கப் போனபோதுகூட இப்படித்தான் திடுதிப்பென்று எங்க தாத்தா இவரைக் கூட்டிக் கொண்டு முதல் நாளே போனாராம். இது எங்கள் வழக்கம்'' என்று ராமசாமி அதே சிரிப்புச் சுருதியில் பின்பாட்டுப் பாடித் தன் குரலை ஒலிக்கச் செய்கிறான்.

அவள் ஒரே ஓட்டமாக மகிழ்ச்சி வேகத்தில் உள்ளே ஓடுகிறாள். வீட்டிலுள்ள மற்றவர்களை வெளியே அனுப்பி உபசரிப்பு வழங்க முயற்சி செய்கையில் வந்தவர்கள் தெரு முனையைத் தாண்டிவிட்டிருக்கிறார்கள்.

முன்னிரவு. வீடு திரும்பிய தகப்பனாரிடம் மோகனாவே விவரிக்கிறாள். அவர் வார்த்தையில் ஆனந்தம் புரூட் சாலிடின் மேல் உள்ள ஐஸ்கிரீமாகப் பொங்குகிறது.

அப்பாக்காரரும் பரவசப்படுகிறார். அறுபத்து ஐந்து ரூபாய் விளம்பரம் பலனளித்த பரமானந்தம்!

அந்த அப்பாக்காரர் வேறு யாருமில்லை! அடியேன்தான்!

• • •

**வி**டுவேனா இனிமேல்! அடுத்த வார ஆரம்பத்திலேயே மதகுபட்டி யாத்திரையை மேற்கொண்டேன். சும்மா சொல்லக் கூடாது, மதகுபட்டி ரங்கசாமி ஒரு ஜெண்டில்மேன்!

''இதோ பாரும் ஐயா! உம்ம பெண் கல்யாணத்தை நீர் ஜமாய்க்கப் போகிறீர், சந்தோஷமாக நடத்தப் போகிறீர். எனக்குக் கொஞ்சம் கூடச் சந்தேகம் இல்லை. இத்தனை பவுன் நகை, இவ்வளவு கிலோ வெள்ளி, வரதட்சிணை இவ்வளவு, என்றெல்லாம் அநாகரிகமாகப் பேசும் வழக்கம் எங்கள் பரம்பரையில் இல்லை! ஆகவே அதுபற்றி நாங்களெதுவும் பேசுவோம் என்று நீர் கற்பனை செய்து கொண்டு வந்திருந்தால் நீர் ஏமாந்து போவீர்! எங்கள் அப்பா எப்படிச் செய்தாரோ அப்படித்தான் நான் செய்வேன். நீர் செய்ய வேண்டியதெல்லாம் , முகூர்த்தத்தை வைத்துத் தகவல் கொடுத்து விட்டுக் கல்யாண ஏற்பாடுகளைச் செய்யவேண்டும். என் பையனை அழைத்து வந்து தாலி கட்டச் சொல்லிப் பெண்ணைக் கூட்டிக்கொண்டு வருவோம். அது சொத்தை இது சொள்ளை என்று எந்த அயிட்டத்தையும் சொல்ல மாட்டோம்! எதிலாவது குறை இருந்தால் நாங்களே ஈடு கட்டிக்கொள்வோம். அவ்வளவுதான்!''

இப்படிப் பேசும் பிள்ளையின் அப்பா, நிஜ வாழ்க்கையில் இருப்பவரா அல்லது கனவா என்று சந்தேகம். ஆனால் ரங்கசாமியின் வீட்டையும், அவரது வசதிகளையும், நகைச் சுவையையும் பார்த்த பிறகு இது அபூர்வமான உண்மையாகவும் இருக்கலாம் என்று தோன்றியது. பிள்ளை ராமசாமி உத்தியோகம் பார்க்கும் கோயம்புத்தூரில் முன்பே ஒரு வீட்டை வாங்கிப்போட்டிருப்பதாக ரங்கசாமி பேச்சு வாக்கில் குறிப்பிட்டார்! மோகனாவுக்குக் கல்யாணப் பிரச்னையோடு வீட்டுப் பிரச்னையும் அல்லவா வெற்றி!



என் வருங்கால மாப்பிள்ளை ராமசாமி என்னை வழியனுப்ப பஸ் ஸ்டாண்ட் வரை வந்தான். பேச்சு வாக்கில் ''மாமா! முகூர்த்தம் மெட்ராஸில்தானே? என் சிநேகிதர்கள் நிறைய அங்கே இருக்கிறார்கள். சொந்தக்காரர்கள் மெட்ராஸ் பார்க்க ஆசைப்படுவார்கள். கொஞ்சம் வசதியான கல்யாணச் சத்திரமாகவே ஏற்பாடு செய்யுங்கள்'' என்று சொல்லி வைத்தான்.

எனக்கு அப்போது இருந்த உற்சாகத்தில் அவன் சொன்ன வார்த்தைகளின் கனம் புரியவில்லை. மனம் போல அந்த வார்த்தைகளும் காற்றில் மிதந்து போயின.

ஆனால் அடுத்த வாரம் மூன்று முகூர்த்தத் தேதிகளைக் குறித்துக் கொண்டு கல்யாண மண்டபம் தேட ஆரம்பித்தபோதுதான் அந்த வார்த்தைகளின் கனம் பாறாங்கல்லாக அழுத்த ஆரம்பித்தது.

மனம் உடைந்து உட்கார்ந்தேன். ஒரு குறிப்பிட்ட நடுத்தரக் கல்யாண மண்டபத்தில் இன்னும் ஆறு மாதம் கழித்து யாரும் புக் பண்ணவில்லை. அதற்குத் தகுந்தாற் போல் ஒரு முகூர்த்தம் பார்க்கலாம்.

ஆனால் அதுவரை மதகுபட்டி ரங்கசாமி பொறுப்பாரா? மகன் ராமசாமிதான் காத்திருப்பானா? 'எங்க அப்பா எங்க அம்மாவைப் பெண் பார்த்த மறு மாதம் கல்யாணம் பண்ணிக் கொண்டார். அப்படி நடக்க வேண்டும்' என்றால் என் ஆனந்தம் என்ன ஆவது?

இதை நான் இரைந்து சொல்லியிருக்க வேண்டும்! என் பெண் மோகனா காதில் விழுந்திருக்க வேண்டும்.

''அப்பா!'' என்றாள் இதமாக. தலையை நிமிர்ந்தேன்.

''குடும்ப வாழ்க்கை என்பது ஒருதலை ராகமா அப்பா?'' என்றாள். எனக்கு எத்தனையோ சிந்தனை. மகிழ்ச்சிக் கடலில் ஆங்காங்கு கவலைத் தீவுகள்!

''எனக்கேதம்மா சினிமாப் படம் பார்க்க நேரம்?'' என்றேன் அப்பாவித்தனமாக.

அவள் அழகாகச் சிரித்தாள். ''நான் சினிமாவைச் சொல்லலே அப்பா! வாழ்க்கையைச் சொல்கிறேன். உங்க சம்பந்தி பெண் பார்த்துக் கல்யாணம் செய்து கொண்ட வழக்கத்திலேயே பிள்ளைக்கும் கல்யாணம் செய்கிறார். உங்களுக்கும் நீங்கள் கல்யாணம் செய்து கொண்ட ஊரிலேயே பெண்ணுக்கும் கல்யாணம் செய்யும் வழக்கம் இருக்கலாமில்லையா?'' அவள் நிறுத்தினாள்.

அடியேன் புத்தரானேன். அவள் போதிமரமானாள்.

''மோகனா! காட்டுப்பாக்கத்திலேயே கல்யாணத்தை வைக்கலாம்னு சொல்றியா? தெருவிலே பத்து வீடுகளைச் சேர்ந்தாற் போல வளைச்சுப் போட்டு அமர்க்களமாகப் பண்ணலாம்! என் கல்யாணத்திலே நாற்பது காஸ் லைட்டுகளுக்கு உங்க தாத்தா ஏற்பாடு பண்ணினார்....''

''இப்போ அதை என்பதாக வேண்டுமானாலும் செய்யுங்கள். எல்லாம் டாப் கிளாஸ்! அவர்கள் திருப்திக்கு மெட்ராஸ் ஹோட்டலில் ஒரு ரிசப்ஷன்! ஓங்கியடியுங்கள்: 'எனக்குக் கல்யாணம் நடந்த இடத்தில்'தான்.....''

''கண்டுகொண்டேன் மோகனா! பிரச்னையைத் தீர்க்க வழி கண்டு கொண்டேன்! இருதலை ராகமாக ஆக்குகிறேன்!... நான் சாயங்காலம் மதகுபட்டிக்குப் போகிறேன்!''

**ம**றுபடியும் சொல்கிறேன். மதகுப்பட்டி ரங்கசாமி ஜென்டில்மேன். மனிதர்களின் சென்டிமெண்டுகளைப் புரிந்து கொள்பவர்! தன்னைப் போலப் பிறரை நினைப்பவர். புரோகிராம் ஓ.கே ஆகிவிட்டது. பையன் ராமசாமி ஆமோதித்து விட்டான்.

நான் காட்டுப்பாக்கத்தைப் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருக்கிறேன் கடைசியாக என் கல்யாணத்தின்போது பார்த்த கிராமம் இப்போது நிறையவே முன்னேறியிருக்கும்!

# கராத்தே பயிற்சி 15

பயிற்சியாளர்: **டோனி பொன்னையா**

சித்திரம்: படம்: உத்ரா தயாரிப்பு: குன்றுமணி



மாணவர்களே! இதுவரை வெளிவந்துள்ள கராத்தே பயிற்சி முறைகளைக்கொண்டு கராத்தே கலையை ஓரளவு தெரிந்தும் புரிந்தும் கொண்டிருப்பீர்கள். ஆரம்பத்திலிருந்து வெளிவரும் பாடங்களை வரிசைக் கிரமமாக ஒன்று சேர்த்து முறைப்படி நீங்கள் இனமும் பயிற்சி செய்து வரவேண்டும். அப்பயிற்சிகளை ஒரு முறைக்குப் பலமுறை செய்யும்போது தவறுகள் ஏற்பட்டால் படங்களைப் பார்த்துத் திருத்திக் கொள்ளுங்கள்.

ஒரு நல்ல ஆசானை நீங்கள் பெற்று நேரிடையாக அவரிடம் பயில்வதும் நல்லதே. பள்ளியில் உபாத்தியாயர் பாடம் நடத்தினாலும் புத்தகத்தையும் படிக்கிறோமல்லவா? அப்படித் தான் இந்த பயிற்சிப் பாடங்களை நீங்கள் நோக்க வேண்டும்.

கராத்தே கலை என்பது மூன்று மாதத்திலோ, ஆறு மாதத்திலோ 'இடீர் சாம்பார் இடீர் ரஸம்' மாதிரி தயாரித்து உடனே கற்றுக்கொண்டு அரங்கேறும் கலை அல்ல. ஒரு திறமையுள்ள கராத்தே கலைஞனாகத் திகழ்வதற்குக் குறைந்தது மூன்று வருஷ கடுமையான பயிற்சிகள் தேவை. ஆகவே இனி வரும் பாடங்களில் உள்ள சிரமங்களை எண்ணிச் சோர்வடைந்து விடாதீர்கள். விடா முயற்சி வெற்றிக்கு அறிகுறி என்பது போல் நீங்கள் ஒவ்வொருவரும் முறையான பயிற்சிகளின் மூலமே உங்கள் தவறுகளைத் திருத்திக் கொண்டு விடலாம்.

## Kata (நிழல் சண்டை)

● கராத்தே கலையில் Kata என்ற கற்பனைத் தாக்குதல் பயிற்சி முறை உண்டு. கற்பனை முறையில் எதிரி இருப்பதாகப் பாவித்து இந்த நிழல் சண்டை போடுவது உங்களுக்கு நிஜமான எதிரிகளைச் சந்திப்பதற்கு வழி காட்டும் பயிற்சியாக அமையும். இந்த (Kata) நிழல் சண்டை பயிற்சிகளைக் கொண்டே ஒருவர் கராத்தே கலையின் தேர்வுகளுக்குத் தகுதியானவரா இல்லையா என்பது முடிவு செய்யப்படும்.

## பயிற்சிகளில் சில மாறுதல்கள்

● இதுவரை நீங்கள் பயிற்சிகளைத் தனித் தனியாகப் பயின்று கொண்டிருக்கிறீர்கள். இப்பொழுது தடுத்தல், குத்துதல், உதைத்தல் போன்றவற்றை இணைத்து ஒரே நேரத்தில் செய்து பழகுதல் மிக முக்கியம். உதாரணமாக எதிரி தாக்கும்போது நாம் அதைத் தடுத்து, ஒரே நேரத்தில் குத்தியும் உதைத்தும் எதிரியைத் தாக்குவது அவசியம். அதற்கு இவை போன்ற இணைப்புப் பயிற்சி முறைகளே உங்களுக்கு உதவும்.



கோவை எக்ஸ்பிரஸ். கடைசி கம்பார்ட்மெண்டில் இருந்த கேண்டீனுக்குப் போய், டிபன் பாக்கெட்டை வாங்கிக் கொண்டு, சீட்டுக்குத்திரும்பி வந்து பிரிக்கலாமா என்று யோசித்தபடி பார்த்தபொழுது... எதிரில்... எதிரில்.....

ஓ! மை குட்னஸ்! அதிர்ந்து போய்... பா...ர்...த்...தே...ன்.

எதிரில் இருப்பவள் கா...காயத்ரிதானா? காயத்ரியேதானா?

அதிர்ச்சி அலைகள் என்னுள் பரவத் தொடங்க.... கொண்டன. என்னுடைய இந்த நிலைக்கு, இந்தப் புகழுக்கு, என் கவிதைகளுக்குத்தூண்டுகோலாய் இருந்த காயத்ரி... என்னைப் பார்த்திருப்பாளோ? எப்படிப் பார்க்காது இருந்திருக்க முடியும்? ஒருவேளை தன் உணர்ச்சிகளை மறைக்கத்தான் அந்தப் புத்தகமோ? கரெக்ட். அப்படித்தான் இருக்க வேண்டும். இத்தனை நேரமாகியும் ஒரு பக்கத்தைக்கூடப் புரட்டாமல்? என்னை, என் பார்வையைச் சந்திப்பதைத் தவிர்க்கிறாள் போலிருக்கிறது!



# காதல் என்கிற ஹிம்சை...

'இது என்ன வித்தியாசமான, விநோதமான சந்திப்பு? ஏழு வருடங்களுக்குப் பிறகு!' மூடியிருந்த கண் இமைகளுக்குள் கண்ணீர் கோத்துக் கொண்டது.

இது காயத்ரியேதான். அதே முகம்... ஆழமாய்ப் பார்க்கும் பெரிய கண்கள்...ஓ! எல்லாம்... எல்லாம் அவளேதான். முகத்தில் மட்டும் சற்று முதிர்ச்சி. பெரிய மனுஷி போல இப்பொழுது. மற்றபடி எல்லாவற்றிலும் அதே காயத்ரிதான்.

என் நினைவில் என்றும் அழிந்துவிட முடியாத கவிதையாக, என் மனப் பொக்கிஷ நினைவுகளின் ராணியாக இருந்த அதே காயத்ரிதான்.

சத்தியமாய், இன்று இப்படி இவளைச் சந்திப்பேன் என்று நினைக்கக்கூட இல்லை. என்ன விநோதமான, விசித்திரமான சந்திப்பு!

மெல்லக் கண்களை விழித்துப் பார்த்த பொழுது, ஏதோ புத்தகத்தில் ஆழ்ந்து போயிருந்தாள் காயத்ரி. இப்பவும் அதே பழைய சீரியஸ்னஸ்தான்.

இந்த விநோத சந்திப்பு என் மனத்தில் விளைவித்த உணர்ச்சிகள்?... மகிழ்ச்சியா?... இல்லை சோகமா? இல்லையென்றால் என்ன அது?

தடுமாறிப் போனேன். உஷ்ணமாய்ப் பெருமூச்சுக் கிளம்பியது. இனம் புரியாத சோக மேகங்கள் என் மனத்தைச் சூழ்ந்து

'சேகர் என்னைக் கல்யாணம் பண்ணிக்குங்க' என்று அழுதபொழுது, அந்தச் சமயத்தில் சூழ்நிலைகளின் கைமையால் கோழையாகிப் போய், அவளை வாழ்த்தி, என்னை மறந்துடும்மா என்று சொல்லாமல் சொல்லிவிட்டு, 'நிறைவேறாத காதல் – அமர காதல் என்று எனக்குள்ளாகவே ஆயிரத்தெட்டு தொண்டிச் சமாதானங்களைச் சொல்லி, என்னையே ஏமாற்றிக் கொண்டு, ஆசைக் கனவுகளுடன் இருந்த அவளை....'

என் இதயம் ஊமை அழுகையாய் அழ ஆரம்பித்தது.

''எக்ஸ்கியூஸ் மீ... சார்...''

நிமிர்ந்தேன். காயத்ரியின் பக்கத்திலிருந்த அந்த 'டீன் ஏஜ்'.

''நீங்கதான் 'சேகர்' என்கிற பேர்லே கவிதை எழுதறவரா சார்?'' என்றான் அவன் கண்கள் படபடக்க.

என் மன உளைச்சல்களை மறைத்துக் கொண்டு மெல்லியதாய்ப் புன்னகைத்தேன்.

''ஓ! வாட் எ பிளெஸண்ட் சர்ப்பிரைஸ்'' சந்தோஷப்பட்டான் அவன்.

''ஒரு தடவை உங்க போட்டோவை ஒரு மேகசின்லே கவிதையோட போட்டிருந்தாங்க. அந்த ஞாபகம்தான் சார். இத்தனை நேரம் கேட்கலாமா வேண்டாமா என்று தயங்கிக்கிட்டே இருந்தேன். உங்க கவிதைகள் எனக்கு ரொம்பப்பிடிக்கும் சார்''



## கார்த்திகா ராஜ்குமார்

சிரித்தேன் மெல்ல. அவள் வார்த்தைகள் மனத்துக்கு இதமாக இருந்தன.

''சார், என் பேர் நித்யா. குயின் மேரீஸ்லே செகண்ட் இயர் தமிழ் லிடரேச்சர்!'' என்றவள் காயத்ரி பக்கம் திரும்பி, ''சித்தி, இங்க பாருங்களேன்! கவிஞர் சேகர்ங்கிறது இவர்தான். போன மாசத்திலே கூட இவரோட கவிதைத் தொகுப்பு வாங்கிட்டு வந்தேனே 'பாலைவனத்தில் ஒரு கப்பல்''ன்னு இவருதுதான்' என்றாள் ஏக உற்சாகத்துடன்.

நான், அவளையே — காயத்ரியையே பார்த்தேன், மனம் படபடக்க. வெகு சாதாரணமாய் நிமிர்ந்தவள், அந்நியமாய், ''வணக்கம்'' என்றாள்.

ஒரு நரகலான வேதனை மனத்துள் அரிக்க, புன்னகைக்க முயன்று தோற்றுப் போனேன். பழையபடி புத்தகத்துக்குள் மீண்டும் ஆழ்ந்து போனாள் காயத்ரி.

''மெட்ராஸ் போறீங்க போல இருக்கு.''

''ஆமாங்க. ஒரு கவிதைத் தொகுப்பு விஷயமாத்தான்.''

''பரவாயில்லே சார். 'நித்யா'ன்னு ஒருமையிலேயே சொல்லலாம். உங்க தொகுப்பு சிறப்பா அமைய வாழ்த்துக்கள்.''

''தாங்க் யூ.''

''உங்க கவிதைகள்லே தெரியற, வெளிப்படற சோகத்துக்கு என்ன காரணம்னு நானும் என் தோழிகளும் அடிக்கடி பேசிக்குவோம். 'கண்ணீர் விதைகள்' கவிதை கிளாஸிக் ஸார். உங்க பேனாவிலே இங்குக்குப் பதிலா கண்ணீரையே நிரப்பி எழுதினது மாதிரி இருந்துச்சு.''

''....''

''உங்களுக்குத் திருமணம் ஆகவே இல்லையாமே சார்? உங்களுக்கு ஆட்சேபனை இல்லேன்னா சொல்லுங்க சார். சும்மா தான் கேட்டேன்.''

வறட்டுச் சிரிப்புடன், வேதனைச் சிரிப்பும் என்னுள் எழ வெளியிட்டேன்.

''நித்யா... எனக்குன்னு ஒரு வைரம் கிடைச்சப்போ, அப்ப இருந்த சூழ்நிலையிலே அதை வெச்சுக்கப் பயப்பட்டேன். தயங் கினேன். ஆனால் அந்த வைரத்தை இழந் திட்ட பிறகோ எல்லாமே... எல்லாமே வெறுமையாயிடுச்சு. வேற எதுக்குமே ஆசைப்பட முடியாதது மட்டுமில்லே.ஆசைப் படவும் தெரியலே.''

''ஏன் சார்.... சார்.... அப்படின்னு காதல்... தோல்வியா?''

கண்கள் படபடக்கத் தயக்கமாய், ஏதா வது தப்பாய்ப் பேசுகிறோமோ என்கிற பயம் குரலில் தெரியக் கேட்கிறாள் நித்யா.

அந்தப்பழைமையான இனிய நினைவுகள்...

ஓ! காயத்ரி!

டிகிரி முடித்துவிட்டு, எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சும், ஹிந்துவின் வான்டட் காலமு மாக நான் இருந்தபொழுதுதான் காயத்ரி யும், அவர்கள் குடும்பமும் எங்கள் பக்கத் துப் போர்ஷனுக்குக் குடி வந்தார்கள்.

காயத்ரிக்கு இரண்டு தங்கைகள், இரண்டு தம்பிகள். அவள் அப்பா ஏதோ ஒரு ஆபீசில் எல்.டி.சி.யாக இருந்தார். இந்தக் காயத்ரி எப்பொழுதும் எங்கள் வீட்டுக்கு வந்து என் தங்கை வித்யாவுடன் அரட்டை அடித்துக் கொண்டிருப்பாள். வேலை தேடும் படலங் களிலேயே மூழ்கிப் போயிருந்த எனக்கு அப் பொழுதும்கூட இவளில் என் கவனம் துளியும் திரும்பவே யில்லை.... அந்த நாள் வரை.

அன்று காலையிலிருந்து சுற்றிய களைப்பு, மனச் சோர்வோடு வீட்டில், முன் அறையில் எங்கள் பழைய ஈசிச் சேரில் சாய்ந்து கொண்டிருந்தேன். அம்மா வெளியே போயிருந்தாள். என் தங்கை மட்டும் உள்ளே பின் பக்கம், துவைத்துக் கொண் டிருந்தாள். யாரோ எதிரில் வந்து நிற்பதை உணர்ந்து நிமிர்ந்தேன்.

''நீங்க கவிதை யெல்லாம் எழுதுவீங் களோ? விஜி காலேஜ் மாகசின்லே வந்த உங்க கவிதையைக் காட்டினு. ரொம்ப நல்லா இருக்கு. உங்க வார்த்தைப் பிர யோகங்கள் எனக்கு ரொம்பப் பிடிச்சது.''

'இவளுக்குக் கவிதைகளை ரசிக்குமளவுக்கு ரசனையா? அதுவும் ஹைஸ்கூலில் எஸ்.எஸ். எல். ஸி. மட்டும் முடித்தவளுக்கு!' ஆச்சரிய மாய் இருந்தது.

''உங்க கவிதைகளைத் தர்ரீங்களா? படிச் சுப் பார்த்துட்டுத் தரேன்.''

எனக்குள் சந்தோஷம் பிரவாகித்தது. அவசரமாய் எழுந்து போய் என் பழைய மரப் பெட்டியைத் திறந்து, உள்ளே அடி யில் இருந்த பேப்பர்களை எடுத்து வந்து...

''உண்மையிலேயே இது பொக்கிஷந் தான்.''

''எதை வெச்சுச் சொல்றேன்னு புரியலே''

''பொக்கிஷத்தைச் சுத்திதானே நாகம் துப்புமா இருக்கும்?''

அடுத்த சில நாட்களில் என் கவிதைகளைத் திருப்பித் தந்தபோது, கூடவே தன் முத்துப் போன்ற கையெழுத்திலுல் பிரதிகளை எடுத்து.... மனம் நெகிழ்ந்து போனேன். மனத்துள் என்னவோகரந்தது... பெருகியது.

''என்ன காயத்ரி இதெல்லாம்?''

''இனிமே உங்க கவிதைகளை என் கை யெழுத்திலேதான் அனுப்பணும்.'' மனம் நிறைந்துபோய்ச் சிரித்தேன்.

பிறகு ஒரு நாள் காயத்ரியிடம், ''காயத்ரி நான் இனிமேல் 'சேகா'ங்கிற புனை பேர்லே எழுதப் போறேன். புரியுதா?'' என்றேன்.

''புரியலையே... 'சேகா'ன்னு....?''

'' 'சே' வந்து சேகருக்கு... கா... வந்து... வந்து...''

காயத்ரி புரிந்துகொண்டு சிவந்தாள். சிரித் தாள். பின் ஏதோ வேகத்தில் என் கையைப் பற்றி முத்தமிட்டுவிட்டு, பிறகு சட்டென்று முகத்தை மூடிக்கொண்டு....

கவிதை தொடங்கி வைத்த எங்கள் காதல் இனிமையாகவே இருந்தது.

ஒரு நாள் வாடிய முகத்துடன் காயத்ரி வந்தபொழுது அதிர்ந்தேன். அழுதுகொண்டு விஷயத்தைச் சொன்னாள் காயத்ரி.

வழக்கமாய்க் காதலில் குறுக்கிடும் பயங் கரம். பெண் பார்க்க வருகிறார்களாம். மாப் பிள்ளை ஏற்கனவே இவளைப் பார்த்துப் பிடித் துப்போய், சீர் வரதட்சிணை எதுவுமே வேண் டாம் என்கிறாராம். பணக்கார இடம். ஒரே உறுத்தலான விஷயம் – இரண்டாம் தார மாகத்தான்.

சொல்லிவிட்டு, ''சேகர், என்னை மறந் துடாதீங்க. என்னை எப்படியாவது உடனே கல்யாணம் பண்ணிக்குங்க.'' என்று காயத்ரி விம்மியதும் தடுமாறிப் போனேன்.

இன்னமும் வேலை கிடைக்காமல், வேலைக் காக அலைந்து கொண்டிருக்கும் நான் என் சம்பளத்தை எதிர்பார்த்துத் தன் வாழ்க் கையை அமைக்கவிருக்கும் என் தங்கை விஜி, என்னையே நம்பிக் கொண்டிருக்கும் தம்பி ராஜு, எல்லா விஷயங்களுக்கும் என்னையே மலை போல் நம்பியிருக்கும் என் விதவைத் தாய்....

ஓ! இத்தனை சுமைகளை வைத்துக்கொண்டு நான் ஏன் காதலித்தேன்? இப்படி அறிவு கெட்ட தனமாக.... இப்பொழுது என்னை நொந்துகொண்டு ஆவதென்ன?

எனக்குக் காயத்ரியைக் கண்ணீருடன் வாழ்த்துவதைத் தவிர வேறு வழி இருக்க வில்லை. புரியவில்லை. சூழ்நிலைகளின் கைதி



யாகிப்போய் அழுதேன். 'ச்சீ' கோழையே என்பது போல் பார்த்துவிட்டு — எதையுமே பேசாமல் போனான் அவள்.

காயத்ரியின் கல்யாணம் அமர்க்களமாய் நடந்தது. புக்ககம் போனாள். காலச் சக்கரத்தின் வேகச் சுழற்சியில் காயத்ரி என்னிடமிருந்து பிரிவதற்காகவே காத்திருந்தது போல் அதிருஷ்ட தேவதை என்னைப் பார்க்க ஆரம்பித்தாள். பேங்கில் வேலை கிடைத்தது. என் கவிதைகள் பிரபலமாகத் தொடங்கின. என் வீட்டில் உள்ள ஒவ்வொருவரின் எதிர்பார்ப்புக் கனவுகளும் நனவாயின.

கிட்டத்தட்ட ஏழு வருட இடைவெளிக்குப் பின், மறுபடியும் இதோ... விசித்திரமான, விநோதமான சந்திப்பு!

கடவுளே... இவளை நான் சந்திக்காமலே இருந்திருக்கக் கூடாதா?

சென்னை நகரின் விளக்குக் கண் சிமிட்டல்கள் தூரத்தில் தெரிய ஆரம்பித்தன. இன்னும் கொஞ்ச நேரத்தில் இவர்களிடமிருந்து பிரிந்து.... 'ஓ! காயத்ரி... நீ ரொம்பவும் அழுத்தக்காரி. ஒரு வார்த்தை கூட உதிர்க்காமல், ஒரு அனுசரணைப்பார்வை கூடப் பார்க்காமல்.... சே!

சென்ட்ரல். காயத்ரி பெட்டியை எடுத்துக்கொண்டு,—தலை குனிந்தபடி, அர்த்தமில்லாமல், உரிமை இல்லாமல் அவளின் பார்வையை எதிர்பார்த்த என்னை ஏமாற்றிவிட்டு இறங்கினாள். நித்யாவும் இறங்க நானும் இறங்கினேன்.

"சார்; நாங்க கிளம்பட்டுமா சார்? எங்க வீட்டுக்கு வர்ரீங்களா சார்? அட்ரஸ் தரேன். சூளையிலேதான் வீடு. ஒரு மெடிகல் ஷாப்புக்குப் பின்னாலேயே..." என்றபடி ஒரு விசிட்டிங் கார்டைத் தந்தாள்.

காயத்ரி எங்கேயோ பார்த்துக்கொண்டு நிற்க, மனத்துள் கசப்பு ஊற்றுப் பாய, போலிப் புன்னகையுடன் தலையசைத்துவிட்டுத் திரும்பி, வேகமாக நடக்க ஆரம்பித்த பொழுது....

திடீரென்று — தலையில் இரண்டு பெட்டிகளுடன் எதிர்ப்பட்ட போர்ட்டரின் மேல் பலமாய் மோதியதில் நெற்றியில் குபுக்கிட்ட ரத்தம் பிசுபிசுக்க, நொடியில் ஸ்டேஷனில் எல்லாருமே தட்டாமாலையாகச் சுற்றிவிட்டு மங்கி, மறைந்து போனார்கள்.

சிரமப்பட்டு, மெதுவாய்க் கண் விழித்த பொழுது, நெற்றியில் வலி விண் விண்ணென்று தெறித்தது. வெள்ளை வெள்ளையாய் உருவங்கள்... டெட்டால் வாசனை மெல்ல மூக்கில் ஏற... ஓ! ஆஸ்பத்திரியா?

"சார்... உங்களைத்தான். இப்ப எப்படி இருக்கு?"

மெல்லத் தலையைத் திருப்பினேன். நித்யா.

"என்ன சார் நினைவிருக்கா? நேத்தைக்கு அந்தப் பெட்டி உங்க தலை மேலே விழுந்தவுடனேயே அவ்வளவுதான். அப்படியே மயக்கமாயிட்டீங்க. நெத்தியிலேந்து வேற எச்சக்கச்சமான ரத்தம். நானும் சித்தியும் பயந்து போயிட்டோம். நாங்கதான் இந்த நர்ஸிங் ஹோமுக்கு டாக்சி வைச்சுக் கொண்டாந்தோம்."

"எ..ன்..ன.. உன் சித்தியுமா?" முனகினேன்.

"என்ன சார் சித்தியுமான்னு கேட்கிறீங்க. நேத்து நீங்க விழுந்தவுடனே எப்படிப்பதறிப் போயிட்டாங்க தெரியுமா? அவங்கதான் ஸ்டேஷன்லேயே கைக்குட்டை கிழிச்சுக் கட்டுப் போட்டாங்க! எனக்கே அவங்க பதற்றத்தைப் பார்த்து ரொம்பவும் ஆச்சரியமா இருந்துச்சு. அப்புறம் டாக்சியிலே வர்றப்போ சொன்னாங்க. நீங்க கூட அவங்க இருந்த தெருவிலேதான் இருந்தீங்களாமே? உங்க கவிதைகள் அவங்களுக்குக் கூடப் பிடிக்குமாம்."

நித்யா சொல்லிக் கொண்டிருந்தாள்.

என் கண்களுக்குள் கண்ணீர் கோக்கக் கண்களை மூடிக் கொண்டேன். நித்யாவின் வார்த்தைகள் என் மனத்தில் இதமாய் வருடிக் கொண்டிருந்தன.

'காயத்ரி நான் நினைத்திருந்தபடி என்னை வெறுக்கவில்லை.... என்னை நேசித்த காயத்ரி, என்னைப் புரிந்து கொண்டிருந்த காயத்ரி என்னைத் தூக்கி எறிந்துவிடவில்லை. என் நிலைமையைப் புரிந்துகொண்டு, சூழ்நிலைகளுக்குப் பலியாகிப்போன என்னைப் புரிந்து கொண்டு,என்னை மன்னித்து... ஓ!காயத்ரி... இது எனக்குப் போதும்.'

"சார்.... சித்தி வந்துட்டாங்க சார்."

ஆவலாய், ஆசையாய், மெல்ல மறுபடியும் கண் விழிக்கிறேன்.

காயத்ரி! இதமான, ஆறுதல் அளிக்கும் புன்னகையுடன் காயத்ரி!

அவளையே பார்க்கிறேன்.

அந்தப் புன்னகை என் உடம்பின் வலிகளையெல்லாம் மறைய வைக்கும் புன்னகை, உன்னை மன்னிச்சுட்டேன் என்கிற புன்னகை,

என்னுள் எங்கும் பரவிப் பாய்ந்து...

கண்களை மெல்ல மூடிக் கொள்கிறேன். வெகு நாட்களுக்குப் பின் ஏற்பட்ட அமைதியில், நிம்மதியில், இனம் புரியாத திருப்தி என்னுள் பொங்கி வழிகிறது.... ஓ! இதுவே இனி போதும் எனக்கு.



# கடுகு பதில்கள்

✕ என். சக்ரபாணி, கோவை

கே. டார்வின் தத்துவத்தை உறுதி செய்வது யாது?

ப: மனிதனிடம் வால் இல்லாவிடினும் வால்த்தனம் இருக்கிறதே, அதுதான்.

கே. 'தடிக்கடா மாடு'' 'உருப்படாத கழுதை'யைப் பார்த்துக் கூறியது என்ன?

ப, உருப்படாத கழுதையாக இராதே! என்னைப் பார்த்தாவது திருந்து. தடிக்கடா மாடாக இரு!

கே. ஒரு பொட்டலம் வேர்க்கடலையில் நீங்கள் சாப்பிடும் கடைசிப் பருப்பு கசப்பானதாக இருந்து தொலைக்கிறதே?

ப: இதில் மாபெரும் தத்துவம் இருக்கிறது. கை நிறைய வேர்க்கடலை இருக்கும்போது ஒவ்வொரு பருப்பாக எடுத்துச் சாப்பிடும் சமயம் நம்மை அறியாமல் முதலில் நல்ல பருப்புக்களைத்தான் தேர்ந்தெடுத்துச் சாப்பிடுகிறோம். நல்லவைகளை நாடுவதுதான் இயற்கையான நம் குணம். ஆனால் குணம் கெட்டுப்போகும்பொழுது அல்லவைகளை நாடுகிறோம். கடைசிப் பருப்பு எப்போதும் கசப்பானதாக அமையும் என்று தெரிந்தும் அதைச் சாப்பிடுகிறோமே அது' நம் குணத்தின் குற்றம் அல்லவா?

கே. உங்களை இவ்வளவு பேர் கேட்கிறார்களே? உங்களுக்கு ஒரு விதமான காம்ப்ளெக்ஸ் வந்து விடாதா?

ப: உலகிலேயே சிறந்த அறிவாளியும் சிந்தனைவாதியும் எழுத்துலக வேந்தனாகவும் நகைச்சுவை மன்னனாகவும் ஈடு இணை இல்லாத ஒப்பாரும் மிக்காரும் இல்லாத அறிவு ஜீவியாக உள்ள எனக்கு ஒரு காம்ப்ளெக்ஸும் வராது!

கே. இதுதான் கிறுக்குத்தனம் என்று எதைச் சொல்வீர்கள்?

ப: ரஜனி காந்த் செய்பவை எல்லாம்.

கே. ஈரானில் உள்ள அமெரிக்கப் பணயக் கைதிகள் பிரச்னையைத் தீர்க்க உங்களை யாரும் அழைக்கவில்லையா?

ப: அவர்கள் விரைவில் விடுதலையாக வேண்டும் என்று நான் பிரார்த்திக்கிறேன். சொந்தக் கவலைகளுக்கே பிரம்மாண்டமான முக்கியத்துவம் கொடுத்து வரும் நாம் பிறரின் துயரங்களையும் பிரச்னைகளையும் லட்சியம் செய்வதில்லை. மாறாக அலட்சியம் செய்கிறோம். மனிதாபிமானம் உள்ளவர்கள் அனைவரும் இந்தப் பணயக் கைதிகளின் விடுதலைக்குப் பிரார்த்திப்போம். எத்தனையோ குடும்பங்களின் வயிற்றில் பால் வார்க்கப்படட்டும்.

கே. முப்பத்திரண்டு பற்களும் தெரியும்படி சிரித்ததுண்டா?

ப: கிடையாது. ஆனால் முப்பத்திரண்டு பற்களும் தெரியும்படி வலியால் துடித்ததுண்டு — டாக்டர் பல்லைப் பிடுங்கியபோது!

கே. கல்கியின் நகைச்சுவை, சாவியின் நகைச்சுவை - ஒப்பிடுக.

ப: நகைச்சுவை ரசனை என்பது முழுக்க முழுக்கத் தனிமனித அனுபவம். கல்கியின் நகைச்சுவை புன்னகையை வர




வழைக்கும். சாவியின் நடை குபுக்கென்று சிரிப்பைத் தோற்றுவிக்கும். முன்னவரது ஆற்றொழுக்கைப் போன்றது; பின்னவரது, பம்ப் செட் தண்ணீரின் வேகத்தைப் போன்றது.

கே. நீங்கள் இந்தப் பிறவியில் ஓர் இந்தியனாக அவதரிப்பதற்குக் காரணம் பாவம் என்று எண்ணுகிறீர்களா? அல்லது புண்ணியமா?

ப: நிச்சயமாகப் புண்ணியம்தான். ஆயிரம் கஷ்டங்கள் இருந்தாலும் இங்கு ஜனநாயகமும் அமைதியும் நிலவுகின்றன. கலைகளும் கலாசாரமும் வளமும் நாட்டமும் பெற்றுள்ளன. யாரால் ஸ்தாபிக்கப் பெற்றது என்று கண்டுபிடிக்க முடியாத அளவு தொன்மையான இந்து மதத்தில் பிறக்கப் புண்ணியம் செய்திருக்க வேண்டும். கடவுள் பக்தி மிக்கவர்கள் உள்ள நாடு. வாக்குரிமை உள்ளது; வாய்க்கும் உரிமை உள்ளது. இது ராமன் நடந்த மண். காந்தி மிதித்த மண். நீங்கள் பாரதியாரின் பாடல்களைப் படித்திருந்தால் இப்படிக் கேள்வியே கேட்டிருக்க மாட்டீர்கள்.

கே. கொக்கு தலையில் வெண்ணெய் வைத்த அனுபவம் உண்டா?

ப: 'கொக்கு தலையில் வெண்ணெய்' என்கிற வாசகத்தின் உண்மையான ஒரிஜினல் உருவம், 'சிக்குத் தலையில் எண்ணெய்' என்பதுதான். ஒரு பெண்ணின் தலை முடியில் நிறையச் சிக்குகள் இருக்கும்போது, முதலில் சிக்குகளை எடுத்துவிட்டுத்தான் எண்ணெய் தடவ வேண்டும். சிக்குடன் உள்ளபோது எண்ணெய் தடவுவது தவறு என்று ஒரு ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார். ஆகவே உங்கள் கேள்வியே ஃபண்டமென்டலி தப்பு!

பரிசு பெறுபவர் : மாபெரும் தத்துவம்

என். சக்ரபாணி
457 ஸ்ரீ நாராயணகுரு ரோட்
கோயமுத்தூர் - 641011





கிறிஸ்துமஸ்
தாத்தாவின் அன்புப் பரிசு

# தமிழ்நாடு அரசு பரிசுச் சீட்டு

குலுக்கல் நாள்
10-12-80

மொத்தம் 4 முதல் பரிசுகள்

ரூ. **50,000** வீதம்

6 இரண்டாவது பரிசுகள்

ரூ. **10,000** வீதம்

இன்னும் ஏராளமான கவர்ச்சிமிகு பரிசுகள் !

பரிசுச் சீட்டின் விலை ரூ. **1**



தமிழ்நாடு பரிசுச் சீட்டு இயக்குநர்
அரசினர் தோட்டம் சென்னை-600 002

EP/DIPR/1028/80



# விட்டில் அணைத்த விளக்கு

## மகரிஷி

### அத்தியாயம் 4

" 'உன்னைச் சுடர் என்று நம்பி வந்தால் வெளிச்சம் தருவாயா, சுடுவாயா?' என்று தானே கேட்டாய்? அவை இரண்டுக்கும் அப்பால் இன்னொரு பதிலும் உண்டு. அது தான் இது! இப்பொழுது என் அணைப்பும் என் உதட்டின் ஸ்பரிசமும் எப்படி இருக் கிறது?''

அவன் காதல் கலையில் கைதேர்ந்தவன் என்பதை அந்த நிமிஷமே புரிந்துகொண் டாள்.

முன்புறம் குறுக்கும் நெடுக்குமாகப் போயிருந்த அவள் கரங்களை எடுத்துக் கொண்ட சுதந்திரம்... மேல் துணியைப் பல்லால் கடித்துத் தோள் வழியே இழுத்த மன்மதக் கலை....

உடம்பு சிலிர்த்துக் கொண்டது. நிதானம் நிலையற்றுப் போன மாதிரி இருந்தது. உணர்ச்சிகளின் பிரளயத்தில் சிக்குண்ட ஜடம் போலத் தட்டாமாலை சுற்றினாள்.

மனக் கட்டுப்பாடுகளும், இவ்வளவு நாட்கள் தற்காத்து, சிறைவைத்துக்கொண் டிருக்கிற பெண்மையின் பூஷணமும் பூட் டுக்கள் அகற்றப்பட்டுக் களவாடப்பட இருக்கும் நிலையைப் புரிந்து கொண்டாள்.

'காதலிக்கலாம், மனத்தைப்பறி கொடுக் கலாம், உணர்ச்சிப் பிரவாகத்தில் தவிக்க லாம், மனம் பேதைமைப்பட அனுமதிக்க லாம்...ஆனால்,

'பெண்மை ஒரு கள்வனால் திருடப்பட அனுமதிக்கக் கூடாது. ஓர் ஆண்மகனால் அது அபகரிக்கப்பட இடம் தரக் கூடாது. முதலில் அவன் என்னை ஆட்கொள்ளட்டும். பிறகு அவனே எடுத்துக் கொள்ளட்டும்.'

அதுவரையில்...

அதுவரையில்....

முன்புறம் மார்பின் மேல் அழுந்திக்கிடந்த அவன் கரங்களை மூர்க்கமாக, மிக மூர்த் தன்யமான விசையில் பிரித்து, அப்பால் தள்ளிவிட்டு அந்த வேலியிலிருந்து வெளியே வந்தாள்.

சுமங்களாவின் இச்செய்கையைக் கண்டு அவன் ஆத்திரப்படவில்லை. மாறாக மிகுந்த ரசனையுள்ளவன் போல் மீண்டும் சிரித்தான்.

''நம்முடைய நாளைய சந்திப்பு...'' — பரசுராமன் இழுத்தான்.

''இப்படித்தான் இருக்குமா?''

''நீ அனுமதித்தால் இன்னும் அதிக சுவை உள்ளதாக இருக்கும்.''

''வாழ்வில் சுவை தேவைதான். அதற்கு முன் அந்தச் சுவை சரியாக, உரிய மரியாதை களுடன் பரஸ்பரம் ருசி அறிந்து பரிமாறப் படவேண்டாமா? பால் பாயசம் ரொம்பப் பிடிக்கும் என்பதால் அது அடுப்பில் கொதித் துக்கொண்டிருக்கும்போதே எடுத்து வாயில் விட்டுக் கொண்டுவிட முடியுமா?''

''நீ நன்றாகப் படித்தவள் என்பதை ஒவ் வொரு நிமிஷமும் காட்டிக் கொள்கிறாய். அது எனக்குப் பிடிக்கிறது. உன்னிடமிருக் கிற இந்த ஜாக்கிரதைத் தன்மைகளை நான் பாராட்டுகிறேன்.''

''நன்றி!''

''நன்றி எதற்கு? நான் சொல்வதைக் கவனமாகக் காதில் போட்டுக் கொள். உன்னை நான் பாராட்டியிருக்கிறேன். அவ்வளவு தான்.''

''ஒரு பாராட்டுக்குள்ளே அநேக அங்கி காரங்கள் உண்டு, தெரியுமா?''

அவன், அவள் கரத்தை மீண்டும் மிகுந்த ஆர்வத்துடன் பற்றி, ''உன்னுடைய அறிவு ஜீவித்தனத்தைக் கண்டு நான் சந்தோஷப் படுகிறேன்!'' என்றான்.

இதுநாள் வரை அவன் அந்த வீட்டுக்கு எத்தனையோ தடவைகள் வந்திருக்கிறான். அவளுடன் பேசுவதற்கும், பழகுவதற்கும் முயன்று அதில் ஓரளவுதான் வெற்றியும் கண்டான். முழுமையாக அவளுடைய தரிசனத்துக்காக ரொம்ப நாட்கள் காத் திருக்க வேண்டியிருந்த போதிலும் தன் பொறுமையை இழக்கவில்லை.

ஒரு பெண்ணைக் கவர நிகரற்ற பொறுமை வேண்டும் என்பது அவனுடைய அநுபவம். சுமங்களாவின் அசட்டைக்காக அவன் மனம் தளரவில்லை. எத்தனையோ பெண்களில் இவ ளும் ஒரு ரகம்.

அந்தப் பொறுமை இப்பொழுது அவ ளிடம் தனிமையில் பேச அனுமதி கேட்கும் வரை முன்னேறியிருக்கிறது.

''நாளைக்கு நான் உன்னை அழைத்துக் கொண்டு போக இங்கேயே வரட்டுமா?'' என்று நிதானமாகக் கேட்டான்.

''வேண்டாம். நூல் நிலைய மண்டபத்தில் காத்திருக்கிறேன்'' என்று அவள் சொன்னதும் அவன் அவளுடைய கையை விட்டு விட்டுப் புறப்பட்டான்.

அருணாசலம், பார்வதம் ஆகியோரின் மனநிலையைப் புரிந்துகொள்ள முனைந்தாள் சுமங்களா.

தேய்பிறை காலத்து இரவொன்றில் தன் கூடு எது என்று தெரியாமல் தெருக் கோடியில் உள்ள மாடத்தின் திண்ணையொன்றில் உட்கார்ந்திருந்தாள் அவள். ஒரு நாளில் தன்னுடைய அநாதைத் தன்மை அவளுக்குப் புரிந்தது.

மாடத்தில் ராதா கல்யாண மகோத்சவம் நடந்து கொண்டிருந்தது. சிறியவர்களும், பெரியவர்களுமாகக் கிருஷ்ண லீலைகளை ஆடிப் பாடிக் கொண்டிருந்தனர். இரண்டு சிறுவர்களுக்கு ராதையைப் போலவும் கிருஷ்ணனைப் போலவும் அலங்காரம் செய்வித்து அவர்களைச் சுற்றிக் கும்மியடித்துக் கொண்டிருந்தார்கள்.

அதைப் பார்த்தபொழுது அவளுக்கு அழுகையே வந்து விட்டது. எப்பொழுதும் ராதையின் வேஷத்தை அவள்தான் போட்டுக்கொள்வாள். கடந்த மூன்று ஆண்டுகளாக அவள்தான் ராதை.

அவளுக்கும் அவர்கள் பாடுகிற கும்மி, கோலாட்டப் பாடல்கள் எல்லாம் நன்றாகவே தெரியும்.

அவளுடைய தந்தை இறந்து விட்டதால் அதில் அவள் கலந்து கொள்ள முடியவில்லை.

அப்படி அந்த அந்த மாடத்தின் நீண்ட வெளிப்புறத் தாழ்வாரத்தில் கண்ணீருடனே உட்கார்ந்திருந்த போதுதான் பார்வதம் அழைத்துக் கொண்டு போனாள்.

சுமங்களாவுக்கு அவள் தேடிக் கொடுத்த நிழல் நிரந்தரமானது. கிட்டத்தட்ட அரண் போன்றது.

பார்வதத்தின் முனைப்பான கண்காணிப்பெல்லாம் சுமங்களாவை வேறு யாரேனும் அழைத்துக் கொண்டு போய் விடக்கூடாது என்பதில் தான் இருந்தது.

தன்னை வைத்துக் கொண்டு நல்ல வசதி படைத்த பரமேசுவரனை வளைத்துப் பிடிக்க வேண்டும் என்பதில்கூட ஒருவித சுயநலம் தான் முன்னின்றதே தவிர வேறு எதுவும் இருப்பதாக அவள் எடுத்த எடுப்பில் சந்தேகப்படத் தயாராக இல்லை.

பரமேசுவரனை (
எப்படி அவளிடத்தில்
மில்லையோ அதே (
காரணமில்லை. இதை
சித்துப் பார்த்துவிட'
ளுடைய விருப்பங்க
மனாகக்குப் பிடித்த
(கோமதிசொல்வ;
துக்கொள்வதில் தட
மா'னங்களையும், அ
களையும் விட்டொ
மானதைப் பற்றி
சுமங்களா முடிவு

முழுமையாக விரும்ப
; ஆழமான காரண
போல நிராகரிக்கவும்
ஓர் எல்லை வரை பார்ட்
வேண்டியதுதான். அவ
ளும், மன நிலைகளும்
மாதிரி இருந்துவிட்டால்?
து போல அவனை வரித்
மறென்ன? வீணான அநு
நாவசியமான தோஷயங்
மித்து விட்டுச் சாத்திய
யோசிக்கலாம் என்று
செய்து கொண்டாள்.

அடுத்த நா ள்—

சுமங்களா வெ ளியே புறப்படத் தன்னைத்
; தயார்ப்படுத்திக் கொண்டிருந்தபோது பார்
வதம் அவளை ! ஒரு மாதிரியாகப் பார்த்துச்



சிரித்துக் கொண்டே
ளுடைய சுபாவம்.
கொண்டு வர வேண்
பேசாமல் அதைச்
சாமர்த்தியம் தெரிந்
மேஸ்வரன் அந்த வீட்
பிறகு அவள் சுமங்க
அன்பைப் பிரவாகம்
வேண்டும்.

சுமங்களா கண்ணாடி
ப்ராவின் மேல் ஜாக்கெட்
குனிந்து முன் கொக்கி
கொண்டிருந்தபோது.

பார்வதம், இதை அவ
நின்று புன்னகையுடன்

ஜாக்கெட்டின் முன் கொ
இணைத்துவிட்டு நிமிர்ந்தபோ
பார்வதம் பார்த்துக் கொண்
ணாடி வழியே கவனித்தாள்.

''என்ன பார்வதம் அப்பப
அப்படிப் பார்க்காதே. என
இருக்கு!'' என்றாள். உடல
பெட்டிகோட் ஜாக்கெட் ச
ளுடைய இளமை, லாவண்
பிரகாசித்துக் கொண்டிருந்த

பார்வதத்தின் கையில் அந்தப்
இருந்தது.

''இந்தா இதைக் கட்டிக்கொ

''ஏது இது?''

''தேடித்து வாங்கிட்டுவந்தே
மாசம் ஒரு இருநூறு ரூபாய் சீட்
துன்னு சொன்னேனே அது
சீட்டுப் பணம் வராம இருந்து
கொடுத்தாங்க....''

பொய் சொல்கிறாள். நிச்சய
அவள் வாங்கியிருக்கவே முடியாது
பரமேஸ்வரன் வந்துவிட்டுப்போன
இந்தப் புடவை உள்ளே இருந்திருக்

''புடவை ரொம்ப நல்லா இரு

''எல்லாமே நல்லா இருக்கும்! க

மறுபடியும் ஒரு குழப்பம். இதை
அனுமதித்துக் கொள்வது? இது
ஆரம்பமாகவோ அல்லது மையம
இருக்கலாம். அவளுடைய முக

இருந்தாள். அது அவ
ஆளைத் தன் வசம்
எடுமென்றால் அதிகம்
சாதித்துக் கொள்ளும்
நவள். அதிலும் பர
டுக்கு வர ஆரம்பித்த
ளாவிடம் காட்டுகிற
ன்றுதான் சொல்ல

முன் நின்று கொண்டு
டை அணிந்தாள்.
களை இணைத்துக்

ளுக்குப் பின்னால்
கவனித்தாள்.
க்கிகளைச் சரிவர
பாது, தன்னையே
டிருப்பதைக் கண்

டிப் பார்க்கிறாய்?
க்கு வெட்கமாக
ம்பில் வெறும்
விதமாக அவ
யழுடையதாய்
து.

புதிய ஷிபான்

ாள்...''

ன். போன
டு முடிஞ்சி
லை ரெண்டு
ரிப்பத்தான்

இதை
து. நேற்று
திலிருந்தே
கிறது.
க்கு!''
டிக்க.''
எப்படி
தற்கோ
மாகவோ
த்தைப்





பார்த்துச் சிரித்துக் கொண்டே அதை வாங்கிக் கொண்டாள்.

'இதை நான் கட்டிக் கொண்ட மாத்திரத்தில் எனது ஒப்புதலையும் உடன்பாட்டையும் சொன்னதாகி விட்டதாக நாமாக ஏன் எண்ணிக் கொள்ள வேண்டும்?'

''பரமேஸ்வரன் ஸாருடன் இன்று வெளியே போகிறேன்.''

புடவையைப் பிரித்து வெகு அழகாகக் கட்டிக் கொண்டே பேசினாள்.

''போயிட்டு வா. அவரு நல்லமாதிரி.''

''அவரைப் பத்தி உனக்கு நல்லாத் தெரியுமா?''

''நல்லான்னா?''

''அவர் யார்? எப்படிப்பட்டவர்? எப்படிப்பட்ட குணம் உள்ளவர்....?''

''தெரியாது.''

பார்வதத்தின் வெளிப்படையான பேச்சை மனத்தில் பாராட்டிக் கொண்டே மீண்டும் கேட்டாள்:

''ஏன் பார்வதம்! ஒரு மனிதரைப் பற்றிய அனைத்தும் தெரிந்து கொள்ளாமல், அவர் யார்? எப்படிப்பட்டவர் என்கிற விவரங்கள் தெரியாமல் இப்படி நான் அவருடன் நெருங்கிப் பழக நீ ஊக்கமளிக்கிறாயே... இது சரியாகப் படுகிறதா உனக்கு?''

''சுமங்களா!'' என்று சற்றே சலனப் பட்டவள் போல அழைத்தாள் பார்வதம்.

''சொல்லு. அவரிடமிருக்கிற பாங்க் பாலன்ஸ் மட்டும் பார்த்துவிட்டு அதன் பேரில் இவ்வளவு அக்கறையும் அவசரமும் காட்டுகிறாயே! உனக்கு அது மட்டும் போதும், ஆனா எனக்கு?''

சுமங்களா தன் வார்த்தைகளில் அதிக ஏற்ற இறக்கங்களை வெளிப்படுத்தாமல் ஒருவரைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிற சாதாரண உணர்வுடன் கேட்டாள். மிகச் சாதாரணமாக அவள் கேட்டாலும் அதனுடைய அத்தனை கனமும் பார்வதத்தை அழுத்திக் கொண்டு தானிருந்தது. அந்த அழுத்தம் தாளாமல் அவள் சலனப்பட்டவளாகவே நின்றாள்.

''நீ மனசிலே எதையோ மூடி மறைச்சுக் கிட்டுக் கொக்கி போட்டு இழுக்கிறே!''

''இல்லே... என்னோட கேள்வி யூடகமற்றது; பிரதானது. விஷயங்களை அறிந்து கொள்கிற வேகத்தைத் தவிர வேறு எவ்வித அர்த்தங்களும் இல்லாதது.''

''பரமேஸ், அவருக்கு அறிமுகமானவர். வியாபாரத்தில் கூட்டுச் சேர யாராவது கிடைப்பாங்களான்னு தேடிக்கிட்டு இருந்தப்போ, அறிமுகப்படுத்தி வைச்சாங்களாம். பரசு இந்த வீட்டுக்கு வருவதும் போவதும் இதெல்லாம் உனக்கு நான் சொல்லணும்கிறது இல்லே. நீயும்தான் ஆரம்பத்திலிருந்து பார்க்கிறியே!''

''ஆமாம். ஆரம்பத்திலிருந்தேதான் பார்க்கிறேன்.'' என்றாள் சுமங்களா. அவள் உடம்பில் அந்த ஷிபான் சேலை அழகாக ஒட்டிக் கொண்டிருந்தது.

மனிதனுக்கு மனிதன் அபிமானம்தான் எந்த விஷயத்துக்கும் காரணமாக இருக்கிறது. பொதுவான நிலையில், ஒருவரை

ஒருவர் கவர ஏதேனும் ஒரு காரணம் இருந்தாக வேண்டும். எல்லா மனிதர்களிடமும் எல்லாம் இருப்பதில்லை. பணம் இருந்தால் திறமை இருப்பதில்லை. திறமை உள்ளவரிடம் பணம் இருப்பதில்லை. இரண்டும் இருந்து விட்டாலோ சரியான சூழ்நிலைகளும் வாய்ப்புக்களும் இருப்பதில்லை. இப்படி ஏதேனும் ஒரு குறைபாடு இருப்பதால்தான் மனிதன் ஏதேனும் ஒன்றுக்கு அடிமையாகி விடுகிறான். அந்த ஒன்றால் ஈர்க்கப்படுகிறான். இந்தப் பலவீனம் இருக்கிற வரை ஒருவரை ஒருவர் வெற்றி கொள்வதென்பது நடைமுறை வாழ்க்கையில் சாத்தியமானதாகிறது.

கண்ணாடியில் தன்னை மீண்டும் மீண்டும் கமங்களா அழகு பார்த்துக் கொண்டாள். புடவை எடுப்பாக இருந்தது. தன் உடம்பில் புதிய மெருகு கூடிவிட்டதான பிரமிப்புடன் பார்வதத்தின் முன்னால் வந்து நின்றாள். எதிர்காலத்தின் பிரச்னை ஒன்று குறித்து அவள் படுகிற ஆதங்கம் முகத்தில் தெரிந்தது.

பார்வதத்தின் முகம் கமங்களாவின் கேள்விகளினால் பாதிக்கப்பட்டு இருந்தது. அதன் உள் அர்த்தங்களை அவளால் ஜீரணித்துக் கொள்வது என்பது சாத்தியப்பட்டதாக இல்லை. ஒருவிதமான சோர்வு முகத்தில் பதிவாகியிருந்தது.

''நீ சொன்னபடி... நீ விரும்பின பிரகாரம் நான் இதோ புறப்பட்டு விட்டேன். சரிதானே! ஆனா ஒண்ணு... நான் அவரை இன்னும் நன்றாகப் புரிந்து கொண்டாக வேண்டும்; தெரிந்து கொண்டாக வேண்டும்.''

பார்வதத்தின் பதிலுக்குக் கூடக் காத்திராமல் அவள் வெளியே புறப்பட்டு விட்டாள்.

பரமேஸ்வரன் குறித்த நேரத்தில் வந்து விட்டான். வெண்மை நிறக் கார் ஒன்றை ஓட்டிக் கொண்டு வந்திருந்தான். உடையிலும், தோற்றத்திலும், வந்து இறங்கிய தோரணையிலும் கம்பீரம் தெரிந்தது.

அவனே பேச ஆரம்பித்தான் முதலில்.

''சில மணி நேரங்கள் உன்னுடன் தனியே அனுபவிக்கப் போவதைக் கொஞ்சம் உயர்ந்த முறையில் கொண்டாட வேண்டும் என்று விரும்பினேன்.''

கட்டங்கள் உள்ள பேண்ட், அதே உயர்ந்த மோஸ்தரில் ஃபுல் ஹேண்ட் ஷர்ட்டும் அணிந்திருந்தான். சந்தன வர்ணத்தில் அணிந்திருக்கும் உடைக்கு ஏற்ற நெக் டை. உயர் ரக லாவண்டரின் சுகந்தம்....

அந்தச் சந்திப்பை உற்சாகமாகக் கொண்டாட விரும்புகிறான் என்பதை அவனுடைய குதூகலமான பிரசன்னத்திலிருந்து கமங்களா யூகித்துக் கொண்டாள். அதன் தன்மைகளைக் கெடுக்க அவள் விரும்பவில்லை.

(தொடரும்)



Geneva
6-6-26

My dear mummie and papu
I am sorry that I was'nt good. But from to-day I am going to be good. And if I am not good do not speak to me. And I will try my best to be good And I will do what ever you till me to do.

Love from your
Indu

**எழுதியது இவர்தான்!**

திருமதி இந்திரா காந்தி தாம் செய்த தவறுகளை ஒப்புக் கொள்ளவே மாட்டார் என்று யாரால் கூற முடியும்? தமது ஒன்பதாவது வயதிலேயே அவர் தவறுக்கு வருந்தித் தாய் தந்தைக்கு எழுதிய கடிதத்தைத் தான் இங்கு காண்கிறீர்கள்.

நன்றி:
ஹிந்துஸ்தான் டைம்ஸ்

# வட்டமேஜை




● ''வி.ஐ.பி. விமானங்கள்''
தலையங்கமா அது?
இல்லை;
சாட்டையடி.
சுள் சுள்ளென்று விழும் வாக்கியங்கள்.
சுரீரென்று சுடும் உண்மைகள்.
சென்னை-33 எம்.ஆர். சத்யநாராயணன்

● ''புதிய வி.ஐ.பி. விமானங்கள் மேக மண்டலத்துக்கு மேலே எவ்வளவு உயரத்தில் பறந்தாலும் சரி விலைவாசிகள் மட்டும் விடு விடுவென்று சரிந்து தரைக்கு இறங்கிவிடும்!'' தலையங்கத்தில் உள்ள இந்த வரிகள் நூற்றுக்கு நூறு உண்மை. இந்தத் தலையங்கத்தைப் படித்த நன்னாளில் சர்க்கரையின் விலையை 65 பைசா குறைத்திருக்கிறார்களே, அரிசியின் விலையை வேறு குறைக்கப் போகிறார்களாம்! ஹையா.... ஜாலி... ஜாலி.
சென்னை-14 ஏ. கே. சங்கர்

● ''இன்னும் இரண்டு மாதங்களுக்கு அமெரிக்க ஜனாதிபதி கார்ட்டர்தான். பிணைக் கைதிகள் போன்ற முக்கிய விஷயங்களில் கூட அவர் முடிவுகளில் குறுக்கிட மாட்டேன்'' இப்படிக் கூறிய ரேகனையும், ஆட்சிக் கட்டிலில் ஏறி நாட்கள்-மாதங்கள்-வருடங்களானாலும் முந்திய ஆட்சியினரைக் குறை கூறியே காலம் கடத்தும் நம் நாட்டு அரசியலாரையும் ஒப்பிட்டு எண்ணவே நெஞ்சு கூசுகிறது.
மதுரை டி.ஆர். பத்மா

● எல்லோரும் 'ரீகன்' என்று அழைக்க உமது கட்டுரையில் ''ரேகன்'' என்று குறிப்பிட்டுக் குழப்பி உள்ளீரே, ஏனய்யா இப்படி?
கோவில்பத்து இரா. இரவீந்திரன்

● அமெரிக்க ஜனாதிபதியின் பெயரின் உண்மையான உச்சரிப்பு இப்போதுதான் தெரிந்தது.
மேட்டுப்பாளையம் பி.ஏ. வஹாத்

● 'இளவல் வருகிறார்' என்று பிரிட்டிஷ் இளவரசர் சார்லஸைப் பற்றி எழுதிய கட்டுரையில் இளவலின் திருமணம் பற்றி ஒரு அறிவிப்பும் வரவில்லை என பி.எஸ்.எம். குறிப்பிட்டிருந்தது இளவலின் காதில் விழுந்திருக்கும்போலத் தெரிகிறது. 19 வயதான ஓர் ஆசிரியையை மணக்கப் போவதாகவும் அது பற்றி அதிகாரபூர்வமாக அவர் பிறந்த நாள் அன்று அறிவிக்கப்படும் என்றும் கூறிவிட்டார். கைமேல் பலன்தான்.
சங்கரன்கோவில் ஏ. சங்கரன்

● மூப்பனார் அவர்களின் பேட்டிக்கு பாரதிய ஜனதா கட்சியின் அகில பாரத செயலாளர் ஜனா கிருஷ்ணமூர்த்தி அவர்களின் பதிலடி நாட்டின் நிதர்சன நிலைமையை உள்ளது உள்ளபடி படம் பிடித்துக் காட்டியது.
மதுரை-1 டி. மாடசாமி.

● ஹர்மினா எழுதிய 'தோப்பில் ஒரு தனி மரம்' அவரது முதல் கதை என்று ஏன் பொய் சொல்கிறீர்கள். பல கதைகள் எழுதியவர் போலச் சொல்லாடலைக் கையாண்டுள்ளார். மிகவும் சிறப்பாக இருந்தது.
ராதாபுரம் புவி

● தோப்பில் ஒரு தனி மரம்' என்பது கதையா என்ன? எந்த அடிப்படையில் இதைப் போட்டிக் கதையாகத் தேர்ந்தெடுத்தீர்கள்?
கோடங்கிபாளையம் ஆசிர் எம். அல்போன்ஸ்

● ம. பொ. சி. அவர்கள் தாகூரைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களைப் பார்த்துத் திடுக்கிட்டேன்.

'ஜனகணமன' கீதம் ஜார்ஜ் மன்னரைப் பாராட்டி இயற்றப்பட்டது என்ற குற்றச்சாட்டு புதிதல்ல. தாகூர் வாழ்ந்த காலத்திலேயே அது எழுந்தது. அதைத் தாகூரே வன்மையாக மறுத்திருக்கிறார். இருந்தும் ம. பொ. சி. இக் குற்றச்சாட்டை எழுப்புவது வருந்தத் தக்கது.
கல்கத்தா-29 க. கிருஷ்ணமூர்த்தி

● திரு ம. பொ. சி. 1906ல் பிறந்தார் என்றால் அதற்குச் சரியான ஆண்டு பராபவ ஆகும். சுபகிருது அல்ல. பிறந்தது சுபகிருது ஆனால் அது 1902ம் ஆண்டு ஆகும்.
திருச்சி வி.வி. அய்யர்

● . தீபாவளிச் சிறப்பிதழில் வெளியான ''சாந்தாவின் சபதம்'' சிறுவர் கதையேயாயினும் 'குழந்தைகளுக்கு நகைகளை அளவுக்கு அதிகமாகப் போடக் கூடாது என்ற கருத்தைப் பெரியவர்களுக்கும் உணர்த்துவதாக இருந்தது.
புதுவை மு. சாயபு மரைக்காயர்

● 'வீடு தோறும் விவாதம்' — நடுப் பக்கக் கார்ட்டூன்கள் பிரமாதம்! உமாபதிக்கு திருஷ்டி சுற்றிப் போடுங்கள்.
இராஜபாளையம் எஸ். விஜயன்

● 'ஷீலா ஸ்பீக்ஸ்' பெண்டாஸ்டிக் சிறுகதை. ஏ.வி.எம். கணேஷின் தெள்ளியநடை, கதை சொல்லும் புது முறை அருமை.
திருச்சி பொன். புண்ணியமூர்த்தி

## அத்தியாயம் 18

ஜெயா எரிமலையாகக் கொதித்து உமிழ ஆசைப்பட்டாள். ஆனால் அர்ஜுனன் முன் அவளால் ஏதும் செய்ய முடியவில்லை. வேம்பு மீது சாடலாம் என்றால், அவன் சமயமறிந்து பின்வாங்கி சமையற்கட்டையும் தாண்டி மறைந்துவிட்டான்.

ஒரு பெண். அழகுதான். அதற்காக? அவள் தன் மௌனக் கோபத்தில் வெளிநடப்புச் செய்துவிட்டாள் என்றால், அர்ஜுனன் அம்மாவை உதாசீனம் செய்துவிட்டு ஓடுவதா? அதுவும் கேவலம் ஒரு பெண்ணைப் பின் தொடர்ந்து?

இருட்டினூடே ஜெயா கண்களால் விழித்துப் பார்க்க முயலவில்லை. எப்படியும் அர்ஜுனன் இன்னும் ஓரிரு நிமிடங்களில் தனியாகவோ அல்லது மல்லிகாவை அழைத்துக் கொண்டோ வரத்தான் போகிறான். அது வரையில் காத்திருக்கலாம்.

அவள் காத்திருந்த அந்த ஒரு நிமிஷம் நீண்டு வளர்ந்து கனத்தது. இருட்டில் அவன் எங்கே? அவள் எங்கே? என்ன செய்கிறார்கள்? நிச்சயமாக அவள் அழுவாள். பெண்தானே! அர்ஜுனனின் அனுதாபம் நிச்சயம்இருக்கிறது என்கிறதைரியத்தில் மாய் மாலக் கண்ணீர் விடுவாள். அசட்டுப் பிள்ளை தன்னையும் தன் நிலைமையையும் தாழ்த்திக் கொண்டு அவளைத் தேற்றுவான். சீ, இவன் என்ன பிள்ளை! அவளுக்கு எதுவுமே சரியாக அமையவில்லை. மூன்று பிள்ளைகளின் மேல் அவள் பாசத்தை நீர்வீழ்ச்சியைப் போல் கொட்டுகிறாளே, அது மடமை, மடமை.

திடீரென்று அரவம் கேட்டது. அர்ஜுன் குரல். ஜெயா ஏன் திரும்பிப் பார்க்க வேண்டும்? பேசுகிறவன் அவள் முன் வந்து பேசட்டும்.

''என்னமோ ஒண்ணு கேட்கணும்னு சொன்னாயே, இப்பக் கேளு அம்மா!''

அர்ஜுனனின் குரலில் தொனித்த மாற்றத்தை ஜெயா உணர்ந்தாள். எப்பொழுதும் நெக்கலுடன், கலகலப்பாகப் பேசும் அர்ஜுன் கடுமையாகப் பேசுகிறான். ஜெயாவுக்குச் சவால் என்றால் பிடிக்கும். யாராவது அடங்கிப் போய்விட்டால், அவளுடைய வெற்றி 'சப்'பென்று ஆகிவிடும். அர்ஜுனன் குரல் மூலமே ஒரு சவாலுக்கு அவளை இழுக்கிறான். ஒரு கை பார்க்கலாம்.

கிரிக்கெட்டில், மட்டையுடன் வருகிறவன் ஆட ஆரம்பிக்கு முன் யார் யார் எங்கெங்கே நிற்கிறார்கள் என்று பார்த்துக் கொள்வதைப் போல் ஜெயா சுற்று முற்றும் பார்த்தாள். வேம்பு இருக்கும் இடம் தெரியவில்லை. நேர் எதிரே அர்ஜுனன் அவளுடைய சோபாவுக்கு எதிர் சோபா அருகே நிற்கிறான். அவனுக்குப் பின்னால் இரண்டு அடி தள்ளி மல்லிகா நிற்கிறாள்.

''என்னம்மா, உன் தொண்டையில் பொருள்விளங்காய்சிக்கிண்டிருக்கா?'' என்றான் அர்ஜுனன். நையாண்டி அபசுவரமாக வெளி வந்தது. கடுமைக் குரலைத் தளர்த்தி யிருந்தால் மல்லிகா சிரித்திருப்பாள்.

''அப்ப அந்தப் பெண்ணை நம்ம ரெண்டு பேருக்கு நடுவிலே வெச்சுண்டுதான் பேசணும்கிறியா?''

''அவ பேரு மல்லிகா. அந்தப் பொண்ணு இல்லே.''

''அவ எதுக்கு இங்கே இருக்கா?''

''இருக்கச் சொன்னேன், இருக்கா!''









''அப்ப, ே போகச் சொன்னுப் போயிடு வாளா?''

''நிச்சயமா. நான் சொல்லாமலே போகக் கூட அவன் த யார். ஆனு போகச் சொல்ல மாட்டேன்.''

''அவ எதுக் ு எல்லா ிடத்தையும் விட் டுட்டு இங்கே இ ிருக்கணும்?''

''ஏன்னு நா ன் இங்கே இருக்கேன்.''

''இதுக்கு என் ன அர்த்தம்?''

''உனக்குப் ட ுரிஞ்சிருந்தா நான் சொல்ல வேண்டிய அவசி ியம் இல்லே. புரியல்லேன்னு சொல்லியும் புர ிரணியம் இல்லே....''

''எனக்கு அவ ளைப் பிடிக்கலே.''

''கோடானு கோடிப் பேர்களுக்கு அவ ளைப் பிடிக்கவில்லை லை.''

''அவளை வச்ச ண்டு என்ன செய்யறதா உ த்தேசம்?''

''என் வயசு அவள் வயசை வைச்சண்டு என்ன செய்ய உ த்தேசிக்கும்?''

''அர்ஜுன்!''

''என்ன கத்தறே அம்மா?''

''ஆபாசமாப் ே பசறே!''

''கேள்விக்கு ஏ ்த்த பதில்!''

''அவள் மாசச் ச ம்பளக்காரி! உன் அப்பா வுக்கு சிசுருஷை செ ய்ய வந்திருக்கிறவள்!''

''அந்தத் தொழிலுக்கு நீ என்னிக்கோ வந்தாச்சு. ஆனு நீ அந்தத் தொழிலேத்தான் கவனிக்கிறதில்லே...! இவ சம்பளத்தை எளிசா எண்ணிக் கொடுத்தி டலாம். ஆனு நீ வாங் கிண்டிருக்கிற சம்பளத்தை எண்ணமுடியாது. அளக்க முடியாது.''

''இது என்னடா பேச்சு!''

''நான் அப்படித்தான் பேசுவேன். எனக்கு கல்யாணம் பண்ணிப் பார்க்கணும்னு வர்றவா போறவா கிட்டே யெல்லாம் தினசரி வாய் கிழியப் புலம்பிண்டிருந்தயே, இப்ப நான் ஒரு வாய்ப்புத் தரேன். என் கல் யாணத்தைப் பண்ணிப் பார்.''

''இவள் யார் பெற்ற பெண்ணோ?''

''இதுக்கு நான் பதில் சொல்லுவேன்... ஆனு அது....அது....''

''சரி போதும். எனக்குப் புரியறது. நீ லவ் பண்றே!''

''ஆபாசமாப் பேசாதே, அம்மா! மல்லி காவை எனக்குப் பிடிச்சிருக்கு அவ்வளவு தான்.''

''நான் இப்ப எதுக்கு மெட்ராஸ் வந் திருக்கேன் தெரியுமா?''

''என் கழுத்தை அறுக்க. அப்பாவின் நிம்மதியைக் குலைக்க. வேம்புவை அதி காரத்தால் விழிச்செறிய....''

''ஒரு பெரிய வக்கீலின் பெண் உனக் காகக் காத்திருக்கிறாள்.''

''வெயிட்டிங் ரூமில் நீயும் துணை இரு.''

''உனக்கு செவ்வாய் தோஷம்.''

''இந்தக் கிளி ஜோசியத்தையும் ஆருடத் தையும் வேறு யார் கிட்டேயாவது சொல். மல்லிகா, போ, நீ போய்த் தூங்கு. இது உன் நாட்டுக் கலகம். விடியாது. நாளைக்கு சீக்கிரம் எழுந்து ஜி. எச்.சுக்குப் போகணும், நீ போ!''

மல்லிகா நகர்ந்தாள்.

''இருடீ!''






மல்லிகா நின்றாள். இத்தனை நேரமும் அர்ஜுனன் பேசியதெல்லாம் அமிர்தமாக அவள் காதில் விழுந்தது. இப்போது நாராசம்.

''என் பிள்ளையை எங்கேடி பிடிச்சே?''

''சென்ட்ரல் ஸ்டேஷனில்!'' என்றான் அர்ஜுனன்.

''நான் அவளைக் கேட்டேன்.''

''நீ என்ன இங்கே கோர்ட்டா நடத்தறே?''

''இது தீராத கேஸ் போலிருக்கு.''

''எங்களைப் பொறுத்தவரை தீர்ந்த கேஸ். அப்பா ஜி. எச்.லிருந்து டிஸ் சார்ஜ் ஆனதும் இவன் முந்நூறு ரூபாய் சம்பளத்திலிருந்து போய்விடுவான்.''

''அப்புறம்?''

''சம்பளம் இல்லே. வேம்புவைப் பேக் பண்ணி ஊருக்கு அனுப்பிடுவேன். அப்பா இங்கே இருப்பார். மவுண்ட் ரோட் துணிக் கடை இப்பக் கூட்டாக இருக்கு. அது தனியார் கடையாக மாறும். அந்தத் தனியார் நான்தான். இவன் அந்தத் தனியாரின் ஒய்ஃப்....''

''இது என்ன விருப்பா, சபதமா இல்லே ஸ்டேட்மெண்டா?'' என்றாள் ஜெயா.

மல்லிகாவின் உடல் சிலிர்த்தது. அவளுக்கும் இம்மாதிரியான ஒரு வாழ்வு அமையப் போகிறதா? அவள்கூடக் கொடுத்து வைத்திருக்கிறாளா!

அவள் நடந்தாள். ஆனால் நடையை உணர வில்லை. மிதந்தாள்.

''நாளைக்குப் பெண் பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறேன்'' என்றாள் ஜெயா.



அவளுக்குத் தான் பிதற்றுகிறோமோ என்ற சந்தேகமும் பயமும் உண்டாயின.

''அவசியம் இல்லே. போன் பண்ணிக் கான்ஸல் பண்ணு.''

''பெத்த தாயாரிடமா இப்படிப் பேசறே?'' என்றாள் ஜெயா.

''ஆமாம். பொறுத தாயாரிடம் பேச முடியாது.''

''உன் அப்பா கிட்டே பேசிக்கிறேன் நீ போ... வேம்பு, வேம்பு... டீ வேம்பு!''

அர்ஜுன் மாடிக்குச் செல்ல, மல்லிகா தன் அறைக்குள் அடைபட, ஜெயா யாரையும் கிழித்துப் போட இயலவில்லையே என்று வேதனைப்படும் ஒரு பிசாசைப் போல் சோபாவில் அமர்ந்திருந்தாள்.

வேம்பு வந்தாள்.

''ஏன்டி இத்தனை நேரம்? எப்பக் கூப்பிட்டேன் உன்னை?''

''என்ன வேணும் ஜெயா?''

''ஃப்ரிஜ்ஜில் என்ன இருக்கு?''

''ஏன் எல்லாம் இருக்கு.''

''அப்ப ஒடா கப் காப்பி கொண்டு வா!''

''சரி. இதோ கொண்டு வரேன்.''

''நில்லுடீ!''

''என்ன?''

''என்னமோ நான் ஒன்னு கேட்கிறேன். நீ ஒன்னு செய்யறே? என்னை என்ன கின்னுக் கீரைன்னு நினைச்சுட்டியா?''

வேம்பு ஏதோ முப்பது வருட காலம் மாப்பிள்ளை வீட்டுச் சோற்றைத் தின்று விட்டோமே என்ற நன்றி உணர்ச்சியில், மாப்பிள்ளையும் சரி, அர்ஜுனனும் சரி, அவளை

ஒரு சமையற்காரியாக நடத்தாமல் மதிப்புடன் நடத்துகிறார்கள் என்ற எண்ணத்தில் இதுநாள் வரை ஜெயாவைப் பொறுத்துக் கொண்டிருந்தாள். சற்று முன் அம்மா பிள்ளையின் தொந்த யுத்தமும் அதில் பிள்ளை கண்ட வெற்றியும் அவன் படம் போட்டுக் காட்டிய எதிர்காலமும் ஏற்கனவே அவளை வெகுவாகப் பாதித்திருந்தது. இன்னும் சில நாட்களில் அவள் சென்னையை விட்டு வெளியேறிவிடுவாள். அர்ஜுன் ஊருக்கு அனுப்புவான். அங்கே கோபிச்செட்டிபாளையத்தில் ஜெயாவின் தர்பாரில் ஒரு நிமிடம் கூடக் கழிக்க முடியாது. என்னதான் அவளும் ஜெயாவும் நீ—வா—போ உரிமையுடன் பழகிப் பேசினாலும் 'நான் உன் யசமானி' என்று ஜெயா அடிக்கடி உணர்த்துவாள். வேம்புவிடம் நிறையப் பணம் இருக்கிறது. இனிமேல் யாரிடமும் கை கட்டி வாய் புதைத்து வேலை செய்துதான் ஆக வேண்டும் என்றில்லை.

"ஏண்டி ஜடம். என்ன அப்படி நின்னுண்டு குரங்கு மாதிரி பல்லைக் கடிக்கிறே?" என்றாள் ஜெயா.

"சரிதான் போடீ... உனக்கு வேலை கெட்ட வேலையிலே ஊழியம் செய்ய நான் இல்லை. நீ அரேபிய ராணியும் இல்லை."

அரேபியாவில் ராணி இருக்கிறாளா இல்லையா என்று ஜெயா யோசிக்கவும் முடியாமல் ஸ்தம்பித்துப் போனாள். யார் இப்படிப் பேசுகிறார்கள்? வேம்புவா! ஒரு சில கண நேரங்கள் அவள் பயந்து போனாள்.

"என்ன சொன்னே?" என்றாள் அவள்.

"ஓட ஓட விரட்டாதே!"

"வேம்பு.. ஏண்டீ, உனக்கு என்னாயிடுத்து. ஏன் ராட்சசி மாதிரிக் கத்தறே!"

"நீ என்ன சாந்த சொரூபிணின்னு மனசிலே எண்ணமா... நான் தூங்கப் போறேன். கார்த்தாலே ஜி. எச்.சுக்குப் போய், மாப்பிள்ளை கிட்டே ஒரு வார்த்தை சொல்லிட்டு என் வழியைப் பார்த்துப்போறேன்!"

வேம்பு இரண்டடி வைத்தாள்.

ஜெயா திண்டாடினாள்.

---

போலீஸ்காரர் : "ஹெல்மெட் இல்லாமல் ஸ்கூட்டர் ஓட்டறது நல்லதில்லே உனக்குத் தெரியாதா...?"

அவன் : "என்ன ஸார் செய்யறது... ஹெல்மெட்டை அடகு வச்சுத்தான் இன்று ஸ்கூட்டருக்குப் பெட்ரோல் வாங்க வேண்டியதாயிடுச்சு!"

- உ. ராஜாஜி



புருஷன், பிள்ளை, சமையற்காரி. யாருமே சரியாக அமையவில்லையே? ஏன்? அவளுடைய குணமும் போக்கும் சரியில்லையா?

"வேம்பு!"

இடீரென்று கருதி குறைந்தது.

வேம்பு தயங்கினாள். ஜெயாவின் குணம் அவள் அறிவாள். கெஞ்சினால் மிஞ்சல் மிஞ்சினால் கெஞ்சல்.

அவள் பதில் சொல்ல வாயெடுக்கையில் டெலிபோன் அழைத்தது.

"யார்டீ போன் பண்றா பார்!"

ஜெயா சொல்வதற்கு முன்பே வேம்பு டெலிபோனுக்குச் சென்றாள்.

"ஹலோ... ஜி. எச்சா?... மாப்பிள்ளையின் பிள்ளையா... கொஞ்சம் இருங்கள்..."

போனை வைத்துவிட்டு வேம்பு பறந்தாள். மாடிப் படிகள் அதிர்ந்தன.

ஜெயா எழுந்தாள். என்ன செய்தி?

ஜி.எச். என்று தெரிகிறது. யார்?

மாப்பிள்ளையின் பிள்ளை என்கிறார்கள். அப்படியானால் எதிர் போனில் அவர் இல்லை. வேறு யார்?

"ஹலோ மாப்பிள்ளையின் ஒய்ப் மிஸர்ஸ் ஜெயா பேசறேன்."

"மல்லிகா அங்கேதானே இருக்கா? இது அர்ஜுனன் வீடுதானே?"

"ஆமாம். நான் அவனுடைய அம்மா."

"மல்லிகா உடனே ஜி.எச்.சுக்கு வரணும்."

"ஜஸ்ட் எ மினிட் ஹோல்டான்...."

அர்ஜுனன் ஓடோடி வந்தான்.

"யார் அம்மா?"

"மல்லிகாவுக்கு."

"வேம்பு, மல்லிகாவை எழுப்பு. ஹலோ, அர்ஜுன் பேசறேன்... என்ன... அப்படியா.. எப்ப? அரை மணி நேரமாச்சா... ஓ.கே... தாங்க் யூ... தாங்க்யூ டாக்டர்."

போனை வைத்துவிட்டு அர்ஜுன் பக்கத்து அறைக்குள் பிரவேசித்தான். சட்டையை மாட்டிக் கொண்டான். கார்ச் சாவியை எடுத்துப் போட்டுக் கொண்டான். பீரோவிலிருந்து கரன்சி நோட்டுக்களை அள்ளிப் போட்டுக் கொண்டான்.

"என்ன அர்ஜுன்? மாப்பிள்ளை கூப்பிடறாரா... ஆபத்து ஒண்ணும் இல்லையே?"

அர்ஜுன் அவளுடைய முகத்தைப் பார்க்காமலே "அதெல்லாம் ஒண்ணும் இல்லை மல்லிகா, வா, போகலாம்." என்றான்.

"புடவை...."

"இது போதும். வா. உன் அம்மாவின் விலாசம் தெரியுமில்லையா? அங்கே டெலிபோன் இருக்கா?"

"இருக்கு. ஏன்? ஏன் என் அம்மாவின்... அப்பாவுக்கு என் அப்பாவுக்கு... ஐயோ, அர்ஜுன்... என்ன நடந்தது... ஏன் முழுசா சொல்லாம என்னை வதைக்கிறீர்கள்...?"

"டெலிபோன் நெம்பரைச் சொல்லு. இப்ப எங்கே இருக்கா?"

"சத்தியமங்கலத்திலா மைசூரிலேயா இல்லே பவானியிலா நிச்சயமாத் தெரியாது. என்ன நடந்திருக்கு. அதைச் சொல்லுங்க. அர்ஜுன்."

"போறவழியில் சிந்தாதிரிப்பேட்டைக்குப் போவோம். அங்கே உன் ஒண்ணுவிட்ட அத்தை பெண் இருக்கா இல்லே?"

# தண்ணீர்! தண்ணீர்!



**நா**டக உலகுக்கு நல்ல காலம் பிறந்து விட்டது! இது குடுகுடுப்பாண்டியின் ஆருடம் அல்ல. கண்ணுக்கு மெய்யாகப் பார்த்த பின் எழுதப்படும் வாக்கியம்!

'வங்கம் போல் இங்கும் ஒரு நாடகம் உருவாகுமா?' என்று இனி யாரும் ஏங்க வேண்டாம். ''தண்ணீர்! தண்ணீர்!'' பார்த்துப் பெருமைப்படலாம். வங்கம் மட்டுமென்ன, மிகச் சிறந்த மேனாட்டு இலக்கியங்களுக்கு நிகரானது என்று நெஞ்சு நிமிர்ந்து அடித்துச் சொல்லலாம்.

பாரத நாட்டின் ஆன்மா அதன் கிராமங்களில் இருக்கிறது என்றார் அண்ணல். அந்த ஆன்மாவைப் படம் பிடித்துக் காட்டுகிறது நாடகம்.

ஓர் அர்த்தமுள்ள நாடகம்; சமூக பிரக்ஞையுள்ள நாடகம். ஆழமான கதை அம்சமும் ஆங்காங்கே அள்ளித் தெளித்தாற் போன்ற இயல்பான நகைச்சுவையும் கொண்டு கருத்துள்ள வசனமும் முனைப்பான நடிப்பும் இணைய, மெய்சிலிர்க்க வைக்கும் நாடகம். காட்சி அமைப்பு கச்சிதம். எந்த ஒருவரையும் குறிப்பிட்டுச் சொன்னால் இன்னொருவருக்கு அநீதி செய்ததாகும் — அப்படி ஒரு டீம் ஸ்பிரிட். காப்டன்: கோமல்.

''ஆமாம், இதைப் பார்த்துவிட்டு உடனே கிராமப்புற மக்களும், அரசியல்வாதிகளும் அரசு அதிகாரிகளும் திருந்திவிடப் போகிறார்களாக்கும்'' என்று அங்கலாய்க்க வேண்டாம். அது அரச மரத்தைச் சுற்றி வந்ததும் வயிற்றைத் தடவிப் பார்ப்பது போலாகும். அத்திமரப்பட்டிக் கிராமத்துக்கு என்று தண்ணீர் கிடைக்கிறதோ அன்று இவர்கள் எல்லோருமே சீர்திருந்தி விடுவார்கள்!

அரங்கேறு முன்னரே பிறந்த தடை உத்தரவு காரணமாய் நாடகம் சற்று பிரபலமடைந்துவிட்டது. ஆனால் பிராபல்யம் என்ற அம்சம் நாடகத்தின் பெரு மதிப்பைக் குறைத்துவிட முடியாது. கனமான நாடகமென்றாலும் வெற்றி பெறுவதற்குரிய சகல அம்சங்களையும் உள்ளடக்கி யிருக்கிறது.

நாடகத்தைப் பார்த்துவிட்டு வந்த எழுத்தாளர் லக்ஷ்மி, நாடகத்தை எழுதி, இயக்கிய கோமல் சுவாமிநாதனை நெருங்கினார். ''எனக்கு மட்டும் அதிகாரம் இருந்தால் ஞானபீடப் பரிசை உங்களுக்குக் கொடுத்து விடுவேன்'' என்றார்!

ஆயிரத்தில் ஒரு வார்த்தை! ஆமோதிக்கிறோம்!

—குட்டி கிருஷ்ணன்

[நாடகத்தைக் கல்கியில் பிரசுரிக்கும் உரிமையைக் கோரிப் பெற்றிருக்கிறோம். 1981 புத்தாண்டுச் சிறப்பிதழில் பிரசுரமாகும். நேயர்களுக்கு மகிழ்ச்சிதானே? —ஆசிரியர்]



---

''பரிஞ்சுட்டுது, அர்ஜுன்... என் அப்பா பிறத்தியாருக்குச் சொன்ன ஜோசியம் பலிச்சுதோ இல்லையோ அவர் தமக்குச் சொல்லிண்ட ஜோசியம் பலிச்சுட்டுது...''

''வா, போகலாம்...''

''இருடா, நானும் வரேன்!'' என்றான் வேம்பு.

அர்ஜுன் ஆச்சரியத்துடன் பார்த்தான்.

''வேம்பு!''

''பச்சை மண்ணிலே பண்ணின குழந்தை அதுக்கு ஆதரவா ஒருத்தி வேண்டாம்? நீ அங்கே இங்கேன்னு அலையே. இவ சுவரோடு சுவரா நின்னு மாஞ்சு போவா... இருடா என் கண்ணே....''

மூவர் செல்லுவதையும் பார்த்த வண்ணம் ஜெயா நின்றாள்.

நிச்சயமாக நாளைக்கு அட்வகேட் குஞ்சிதபாதம் வீட்டில் பாமாவைப் பெண் பார்க்கச் செல்ல முடியாது!

நாளைக்குக் காலையிலே காப்பி போட்டுத் தர யாரும் இல்லையே?

அவளே போட்டுக் கொள்ள வேண்டியது தான்.

ஜெயா வாயிற்கதவைத் தாளிட்டு விட்டுப் படுக்கை அறைக்குச் சென்றாள்.

தன்னை எந்த இடியும் பாதிப்பதில்லை என்பதை நினைத்துப் பார்த்தபோது அவளுக்குப் பெருமையாக இருந்தது.

(தொடரும்)

"அப்பா! கதை சொல்லு" என்று சிணுங்கியவாறு மாலு சங்கரனின் அருகில் வந்து படுத்துக் கொண்டு அவனுடைய சிந்தனையைக் கலைத்தாள். ஆபீஸ் அரசியல் பற்றிய சிந்தனைகள்....

"உம்... சரி; சொல்றேன்...." என்று சங்கரன் அவளுடைய இரண்டு வயதுக் குஞ்சு உடலில் தட்டியவாறு யந்திரம் போலத் தொடங்கினான்: "ஒரே ஒரு ஊரில் ஒரு காக்காய் இருந்ததாம்...."

"காக்காய் கதை வேண்டாம்" என்று மாலு கைகளையும் கால்களையும் படபட வென்று படுக்கையில் அடித்தவாறு ரப்பர் பந்து போலத் துள்ளத் தொடங்கினாள்.

"வேறே என்ன கதை வேணும்?" என்று மாலுவைக் கேட்டான்.

"கறுப்பு அம்பா கதை."

"சரி, சரி. சொல்றேன்."

அம்பா என்றால் மாடு. கறுப்பு அம்பா என்றால் கறுப்பு மாடு. அதாவது எருமை மாடு. தனித்த மொழியும் எளிய சுக துக்கங்களும் உள்ள மாலுவின் சின்னஞ் சிறு உலகம். அந்த உலகம் சங்கரனுக்கு ஓர் ஒளி வட்டமாக விளங்குகிறது. வஞ்சக மும் குரோதமும் நிறைந்த பெரியவர்கள் உலகத்தை 'ஸ்விட்ச் ஆப்' செய்துவிட்டு அவன் பதுங்கக்கூடிய ஒரு 'வளை'.

வீட்டருகே எருமை மாடுகளுக்குக் குறைச் சல் இல்லை. நாய்க்கு அடுத்தபடியாக மாலு வுக்கு மிகவும் பரிச்சயமான பிராணி எருமை மாடுதான். சங்கரன் கிராமத்தில் வளர்ந் தவன். மாலுவின் வயதா யிருந்தபோது பெரும்பாலான நேரத்தை வீட்டிலிருந்த மாட்டுத் தொழுவத்தில் மாடுகளை வேடிக்கை பார்த்தவாறு கழித்தவன். மாட்டிலிருந்து தான் பால் வருகிறது என்பது அந் த வயதி லேயே அவனுக்குத் தெரியும். ஆனு ் மாலு வுக்கோ, அவள் வளருகிற ( 'பரிய நகரச் சூழ்நிலை காரணமாகப் பாலுக்கு 5ம் மா ட்டுக் கும் உள்ள சம்பந்தமே தெரிய ாது. ' ால் கார மாமா'வின் சைக்கிளில் பிட டில் பாட லாகப் பால் காய்ப்பதாக அவள் நினைத்து கொண்டிருந்தாள் சில நாள் மு ன்பு வரை யில். ஆனால் சங்கரன் அவளுக் கு அம்பா கதை சொல்லத் தொடங்கியதிலி ருந்து அவ ளுக்கு இவ்விஷயத்தில் கொஞ்சம் தெளிவு ஏற்படத் தொடங்கி யிருக்கிறது.

"ஒரே ஒரு ஊரில் ஒரு கறுப்ப அம்பா இருந்ததாம்...." என்று சங்கர ன் கதை சொல்லத் தொடங்கினான். மாலுவி ன் முகத் தில் ஆர்வமும் மகிழ்ச்சியும் துள் ளின.

கறுப்பு அம்பா மாலுவுக்கு எப் படியோ அப்படியே அவனுக்கும் ஒரு இஷ்ட தெய் வம்தான். தினசரி அது புதிதாக என்ன செய்யப் போகிறது என்று அறிவதில் மாலு வுக்கு இருக்கிற ஆர்வமும் ஏக்கமும் அவ னுக்கும் உண்டு.

இன்று கதையில் கறுப்பு அம்பாவுக்கு ஜலதோஷம் பிடித்துவிட்டது. அ ச்சு. அச்சு என்று ஆட்டம் பாம் ("அப்பா, ஆட் டம் பாம் எப்படி இருக்கும்?") வெடிப் பது போலத் தும்மத் தொடங்கிவிட்டது. (சங் கர னுக்கு இரண்டு நாட்களாக ஜலதோஷம். எனவே தவிர்க்க முடியாமல் கறுப்பு அம் பா வுக்கும் ஜலதோஷம் பிடித்து விட்டது) பாவம், அம்பாவுடைய குட்டிக்கு அம் பா விடம் பால் குடிக்க முடியவில்லை. அது பால் குடிக்க மூஞ்சியைப் பக்கத்தில் கொண்டு போகிறச்சேயெல்லாம் 'பெரிய' அம்பாவின் உடம்பு தும்மலிலே குலுங்கிக்



குலுங்கி அழ ஆரம்பிக்கிறது. குட்டியின் மூஞ்சி யிலே பட்டுப் பட்டுன்னு அடி வேறே விழுந்து அதுக்குப் பாவம் மூஞ்சியெல்லாம் வீங்கிப் போகிறது. ஒரே வலி.... அது பெரிசா அழ ஆரம்பித்ததாம்....'' எப்படி அழுததாம், சொல்லு?''

''ஏ(ங்)... ஏ(ங்)... ஏ(ங்)...'' என்று மாலு அழுது காண்பித்தாள்.

''கரெக்ட். குட்டி அழுகிறதைப் பார்த்துக் கறுப்பு அம்பாவுக்கும் அழுகை அழுகையா வந்ததாம். அதுவும் ஏ(ங்)... ஏ(ங்)... ஏ(ங்) அப்படின்னு அழுததாம். இரண்டுமா ரொம்ப நாழி இப்படி அழுதுண்டே இருந்ததாம். அப்போ, அப்பா ஒரு குதிரை வந்ததாம். குதிரை இருக்கே, கறுப்பு அம்பா அழறதைப் பார்த்து. 'அம்பா, அம்பா, நீ ஏன் அழுறே?'ன்னுட்டுக் கேட்டுதாம். 'எனக்குச் சும்மா சும்மா தும்மல் வந்து உடம்பெல்லாம் ஆடறது. அதனாலே குட்டிக்குப் பால் கொடுக்க முடியலே' அப்படின்னு கறுப்பு அம்பா அழுதுண்டே சொல்லித்தாம். 'அப்படியா? அழாதே, அழாதே. என் முதுகிலே ஏறிக்கோ நான் உன்னை டாக்டர் கிட்டே கூட்டிண்டு போறேன்' அப்படின்னு குதிரை சொல்லித்தாம். குட்டி கறுப்பு அம்பாவும் கூட வருவேன்னு அழுததாம்!

'ஐயோ! இரண்டு பேரும் என் முதுகிலே ஏறிண்டா என் முதுகு உடைஞ்சு போயிடுமே, நான் என்ன பண்றது..ஊ(ங்)..ஊ(ங்) ஊ(ங்)... ஊ(ங்)....' அப்படின்னு அழுததாம். உடனே கறுப்பு அம்பா இருக்கே, 'ஏ குதிரை, நீயும் அசடு மாதிரி அழாதே. இந்தக் குட்டி மட்டும் உன் முதுகிலே ஏறிக்கட்டும். நான் நடந்தே வரேன்' அப்படின்னு சொல்லித்தாம். உடனே குதிரை சந்தோஷத்திலே ஈஈஈஈஈன்னு சிரிச்சதாம்....

இப்படியாக மெல்ல மெல்ல கதை டாக்டர் வீடுவரை வந்து சேர்ந்தது. மாலுவுக்கு இன்னும் தூக்கம் வருகிற வழியாயில்லை. சங்கரனுக்கோ பொறுமை போய்க் கொண்டிருக்கிறது. கற்பனை வறண்டு கொண்டிருக்கிறது. ஆனால் அவன் இன்னும் முழுவதுமாக நம்பிக்கை இழக்கவில்லை. டாக்டரின் வீடு – அதுவும் மிருக டாக்டரின் வீடு – சாத்தியக்கூறுகள் நிரம்பியது. அவன் அந்த டாக்டரின் காம்பவுண்டில் ஏற்கனவே காத்திருக்கும் மிருகங்களை வர்ணிக்கத் தொடங்கினான்.

இப்படி டாக்டரின் சிகிச்சைக்காகக் காத்திருந்த மிருகங்களைச் சங்கரன் மாலுவுக்காக விவரித்துக் கொண்டே போனபோது திடீரென்று ஒரு அற்புதம் நிகழ்ந்தது: ஒரு ரஸவாதம். அந்த மிருகங்களெல்லாம் திடீரென்று சங்கரனுக்குப் பரிச்சயமான சில மனிதர்களாக மாறிப் போனார்கள்– அவனுடைய ஆபீஸ் சகபாடிகள்: வாலாட்டுகிறவர்கள்; தொண்டை கிழிய ஜம்ப மடித்துக் கொள்கிறவர்கள்; குழுவுக்குக் குழு மாறும் 'கட்சி மாறிகள்; சங்கரனைப் போலவே வேறு சில 'சுமை மாடுகள்'; துளிப் புல் மேய்கிற மேலு மிலுக்குகள்; வத்தி வைக்கிறவர்கள்; காலை வாருகிறவர்கள்: கூழைக் கும்பிடு போடுகிறவர்கள்....

இந்த ரஸவாதம் நிகழ்ந்ததுதான் தாமதம், தேய்ந்து போகத் தொடங்கியிருந்த சங்கரனுடைய கதை சொல்லும் ஆர்வம் மீண்டும் சுறுசுறுப்படைந்தது. அவன் உற்சாகமாகக் கதையைத் தொடர்ந்தான்.

பேஷண்டுகளெல்லாம் தம் முறை வருவதற்காகக் காத்தவாறு க்யூவில் நிற்கிறார்கள். கறுப்பு அம்பாவும் தன் குட்டியுடன் நிற்கிறது. க்யூ ரொம்ப மெதுவாக நகர்கிறது. நரி 'ஊ....ஆ...' என்று ஊளையிடுகிறது. சத்தம் கேட்டு டாக்டர் வெளியில் ஓடி வருகிறார்.....

உற்சாகத்துடன் ஆபீஸ் நிகழ்வுகளை மிருகங்கள் சம்பந்தப்பட்ட கதையாக உருமாற்

---

## சாதனை சூடும் காரிகை

'' பட்டதாரியான திருமதி ஜெயந்தி, பம்பாய் ராஜ ராஜேஸ்வரி கலாமந்திரின் பரதக் கலை மாணவி. நாட்டிய சாஸ்திரங்களில் நல்ல பயிற்சி பெற்றவர். இவரது பரத நாட்டிய குரு கல்யாணசுந்தரம் என்னை ஜெயந்திக்கு அறிமுகப்படுத்தினார். அப்போது ஜெயந்திக்குத் திருமணமாகி ஒரு மாதம் ஆகியிருந்தது. கணவர் திரு பிரானே நேப்தே.

''ஒரு கண்ணாடி எதிரில் (கற்பனைதான்) ஜெயந்தி இருப்பது போலவும், காதணிகளை சூடுவது போலவும் படம் எடுக்கும் திட்டத்தை விளக்கினேன். இதைச் சிரித்தவாறே ஆமோதித்த திரு பிரானே நேப்தே எங்களுக்கும் சிரிப்பு மூட்டிக் கொண்டே இருந்தார். நானும் திருமதி ஜெயந்தியும் கஷ்டப்பட்டுச் சிரிப்பை அடக்கிக் கொண்டோம். எப்படியோ படம் பிரமாதமாய் அமைந்தது. எனக்கு மிகவும் பிடித்த அந்தப் படம்தான் இவ்வார கல்கி மேலட்டையில் இடம்பெற்றுள்ளது'' என்கிறார் உத்ரா. திருமதி ஜெயந்தி இப்போது அமெரிக்காவில் இருக்கிறார்.

பேட்டி: சிக்கி



றிக்கொண்டு போன சங்கரனுக்குத் திடீ ரென்று சந்தேகம் வந்தது: ஒருவேளை மாது வின் புரிந்து கொள்ளும் சக்திக்கு மீறியதாகப் போய்விட்டதோ கதை? கவலையுடன் மாது வைக் கவனித்தான். அவள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தாள். கறுப்பு அம்பா க்யூவில் நின்று கொண்டிருந்தபோதே அவள் தூங்கிப் போயிருக்க வேண்டும்.

கதையின் இறுதிப் பகுதி சங்கரனின் சுய இரக்கத்தைத் தூண்டி விட்டது. அவன் தன் மீதே பரிதாபப்பட்டவாறு சற்று நேரம் படுத்திருந்தான். ஆமாம், க்யூவில் காத்து நிற்கும் அப்பாவி எருமை அவனேதான்...

அவன் மனைவி விஜி சமையல் காரியங்க ளெல்லாம் முடிந்து, கையில் பால் தம்ள ருடன் அங்கே வந்தாள். ''சபாஷ்! அப்பா வுக்கு வெற்றியா?'' என்றாள், தூங்கும் குழந்தையைக் கவனித்து. சங்கரன் எழுந்து உட்கார்ந்து அவள் கையிலிருந்த பால் தம்ளரை வாங்கிக் கொண்டான். ''இந்தப் பாலுக்காக நான் தினம் வஞ்சனையில்லாமல் உழைக்கிறேன்'' என்றான்.

''ஸார்! நான் தினம் பகல் சாப்பாட்டுக்கு இதைப் போல உழைக்கிறேன், தெரியு மோன்னோ? தினம் பகலிலே அவளுக்கு மெனக்கெட்டு கதை சொல்லிக் கதை சொல் லித் தூங்கப் பண்ணப்புறம்தான் எனக்குச் சாப்பாடு.''

''என்ன கதை சொல்லுவே, அவளுக்கு— குருவிக் கதையா, காக்காய் கதையா?''

''அதெல்லாம் சொன்னால் உங்க பொண் கேட்பாளா? அதுதான் அம்பா கதை சொல்லிச் சொல்லி அவளைக் கெடுத்து வைச் சிருக்கீங்களே! நானும் அம்பா கதைதான் சொல்லுவேன் — என்னுடையது வெள்ளை அம்பா, அவ்வளவுதான் வித்தியாசம்.''

''ஓகோ!'' என்று சங்கரன் தலையைப் பலமாக ஆட்டினான். ''புரிந்தது, புரிந்தது. பசுமாட்டுக் கதை... நீதானுக்கும் அந்தப் பசு மாடு?''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது.''

''பசுமாடு பிறந்த கதையா, வளர்ந்த கதையா, புக்ககத்துக்கு வந்த கதையா?''

''எல்லாம்தான். ஒவ்வொரு நாள் ஒவ் வொன்று.''

''ஓகோ!.... ஆமா, புக்ககத்திலே என்ன ஆகிறது, பசுமாட்டுக்கு?''

''புதிசாக ஒண்ணுமில்லே. எல்லாப் பசு மாட்டுக்கும் ஆகிறதுதான்... சதா இடுப் பொடிய வேலை, அதற்கு மேலே குற்றங் குறைகள், புகார்கள். கறுப்பு அம்பாவுக்கு இதொண்ணும் தெரியாது. ஜாலியாக வெளியே போகும், வரும். வீட்டிலே இருக் கிறபோதெல்லாம் ஹாய்யாகப் படுத்திண் டிருக்கும்.....''

''யாரந்த கறுப்பு அம்பா?''

''நீங்கள்தான்'' என்றாள் அவள்.

# கொலைகாரக் கார்!

## THE CAR

ஹாலிவுட் தயாரிப்பாளர்களின் கற்பனைக்கு எல்லையே இல்லைபோலிருக்கிறது. இப்போது ஒரு காரை வில்லனாக்கியுள்ளனர். ஒரு கறுப்பு நிறக் கார் கண்ணிமைக்கும் நேரத்தில் தெருவில் நடந்து போய்க்கொண்டிருக்கும் வழிப்போக்க னின் மேல் ஏறி, அவனைச் சாகடிக்கிறது. அடுத்த பலி சைக்கிளில் ஜாலியாகப் போய்க்கொண் டிருந்த இருவர். காரை ஓட்டுபவர் யாருமில்லை. தானாக இயங்குகிறது! போலீஸ் அதிகாரி இந்தக் கொலைகார காரை வளைத்துப் பிடிக்க முயலும் போதே நகர ஷெரீப், காரினால் தாக்கப்பட்டு இறக்கிறார். கூட்டமாக வந்துகொண்டிருந்த பள்ளி சிறுவர்கள், ஆசிரியர்கள் அனைவரையும் இந்தக்கார் துரத்தோ துரத்தென்று துரத்து கிறது. காரைத் துப்பாக்கியினால் சுட முயன்ற போது ஒரு சிறு சிறல்கூட விழாமல் இருக்கிறது! கடைசியில் ஒருமாதிரியாக இந்த இயந்திர எமனுக்கு கண்ணி வைத்து, போலீஸ் அதிகாரி கட்டிப்போக்கி அதன் அக்கிரமங்களுக்கு முற் றுப்புள்ளி வைக்கிறார். - டி. எம். ஆர்.



# பாட்டுக்கொரு புலவன்



ம.பொ.சி

## 3. தேசாபிமானி

ஆறு லட்சம் வெள்ளையர்கள் முப்பது கோடி இந்தியர்களை அடிமைப்படுத்தி, அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்தினார்களே, அந்தக் கொடுமையை அழிக்கத்தான் மனிதாபிமானியான பாரதியார் தேசாபிமானியாகவும் வாழ்ந்தார். ஒவ்வொரு இந்தியனையும் தேசாபிமானியாக்கப் பாடினார். பாடுபட்டார்.

''பாருக்குள்ளே நல்ல நாடு எங்கள்
பாரத நாடு''

என்று நமது தாய்நாட்டைப் பெருமிதத்துடன் போற்றினார். தேசாபிமானம் இல்லாதவனுக்கு மனிதாபிமானமும் இருக்காது என்பது பாரதியின் சித்தாந்தம். தேசாபிமானம் இன்றி பரதேசிகளாக வந்த பரங்கியர்களிடம் உத்தியோகம் பெற்று வயிறு வளர்த்தவர்களைப் பார்த்து, ''நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு'' என்று சாடினார்.

நமது தாய்நாடு ''இந்தியா'' என்றும் அழைக்கப்படுகிறது. இந்த நாட்டின் மீது படையெடுத்து வந்த அன்னியன் எவனோ சிந்து நதியை நினைத்துக் கொண்டு அதைச் சரிவரச் சொல்ல முடியாமல் உளறினான். அதுவே 'இந்தியா' என்று திரிந்துவிட்டது. இந்தப் பெயர் பாரதியாரைக் கவரவில்லை. தன் பாடல்களிலே மூன்றே பாடல்களில்—ஆறே இடங்களில் — 'இந்தியா' என்னும் பெயரைப் பாரதியார் பயன்படுத்தியிருக்கிறார். மற்ற எண்ணற்ற கவிதைகளிலே நூற்றுக்கு மேற்பட்ட இடங்களிலே தன் தாய் நாட்டை, பாரதம் — பாரத நாடு — பாரத தேசம் — பாரத பூமி — ஆரிய நாடு — ஆரிய தேசம் — ஆரிய பூமி என்றெல்லாம் பெயர் சொல்லி அழைக்கிறார்.

பாரதியார் நடத்திய வாரப் பத்திரிகைக்கு இந்தியா என்றுதான் பெயர். அதனை நான் மறந்துவிடவில்லை. அந்தப் பத்திரிகையிலேயே ஒரு இதழில் எழுதியிருக்கிறார், முதலில் வந்தே மாதரம் என்ற பெயரையே வைக்க நினைத்ததாக!

இதே தன்மான — தேசாபிமான உணர்ச்சியுடன்தான் தமிழ் வழங்கும் மாநிலத்துக்குப் பரங்கியர் வைத்த 'மெட்ராஸ் ஸ்டேட்' என்னும் பெயர் நீடிப்பதை — நிலைபெறுவதை எதிர்த்தேன்.

பாரதியார் வாழ்ந்த 19, 20ஆம் நூற்றாண்டிலே செய்திப் பத்திரிகைகள் தோன்றியிருந்தன. அவற்றிலே உலக நாடுகளின் நிகழ்ச்சிகளெல்லாம் பிரசுரிக்கப்பட்டு வந்தன. தந்தி — தபால் போக்குவரத்துகளும் அதிகப்பட்டிருந்தன.

இவ்வளவிருந்தும் தமிழ்ப் புலவர்களிலே எவரும் வெளி உலகத்தின் மீது தங்கள் பார்வையைச் செலுத்தவில்லை. அந்தப் பார்வையைப் பெற்றிருந்த முதற் கவிஞர் பாரதியார் தான். இது, அவருக்குள்ள தனிச் சிறப்புக்களில் ஒன்றாகும்.

முதல் மகா யுத்தத்தின்போது பிரான்ஸ் நாட்டுக்குள் படையனுப்ப பெல்ஜியம் நாட்டிடம் வழி கேட்டது ஜெர்மனி தேசம். வழி விட மறுத்தது பெல்ஜியம். அதனால், பெல்ஜியத்தைத் தாக்கி, அதை வீழ்த்தி விட்டு, அப்புறம் தான் விரும்பியபடி பிரான்ஸுக்குள் படை அனுப்பியது ஜெர்மனி. இந்த நேரத்தில்தான் வீழ்ந்த பெல்ஜியத்தைப் பாடினார் பாரதியார். ஆனால் ''பெல்ஜியத்தின் வீழ்ச்சி'' என்றோ, ''வீழ்ந்த பெல்ஜியம் என்றோ தனது பாட்டுக்கு அவர் தலைப்புத் தரவில்லை. ''பெல்ஜியம் நாட்டுக்கு வாழ்த்து'' என்றே தலைப்புத் தந்துள்ளார். கவிஞர்களாகட்டும், அரசியல் அறிஞர்களாகட்டும்; ஒரு நாட்டினை ஆளுவோராகட்டும்; வெற்றி பெற்ற நாட்டுக்கே வாழ்த்துக் கூறுவது வழக்கம்.

ஒரு நாட்டிலே இராணுவத் தலைமை கலகம் செய்து — சில சமயங்களில் ஆளுவோரைக் கொன்று — ஆட்சியைக் கைப்பற்றிவிடுவதைப் பார்க்கிறோம். அந்த ஆட்சியையும் வரவேற்று, அதற்கு வாழ்த்துக் கூற உலக நாடுகள் தயங்குவதில்லை. ஆனால் உண்மைக் கவிஞன் நிலை வேறு. அவன் வாழ்த்துவது தருமத்தைத்தான்! வீழ்ந்துவிட்ட பெல்ஜியத்தைப் பாரதி வாழ்த்தினான் என்றால், அதன் கட்சியிலே தருமம் இருந்தது என்ற காரணத்தால்தான்!

பெல்ஜியத்துக்கு வாழ்த்துக் கூறும்போது தனது தாயகத்தை — குறிப்பாக, தமிழகத்தை — அவன் நினைத்துக் கொள்கிறான். தமிழ் நாட்டிலே மலைப் பிரதேசங்களில் வாழும் குறப் பெண்கள் முறத்தால் அரிசியைப் புடைப்பார்கள். அந்த நேரத்திலே புலி எதிர்ப்பட்டுவிட்டால் கையில் உள்ள முறத்தைக் கொண்டே புலியைத் துரத்த முயல்வார்கள். ஆம்; பழங்காலத்திலே! வென்றது புலியா? முறத்தைக் கையில் பிடித்த பெண்ணா என்று கேட்கிறீர்களா? வென்றது புலிதான்; குறப் பெண் அல்ல! அதனால்தானே வீழ்ந்துவிட்ட பெல்ஜியத்துக்கு தமிழ்நாட்டுக் குறப்பெண்ணை உவமை காட்டுகிறான்.

''அறத்தினால் வீழ்ந்துவிட்டாய்;
அன்னியன் வலியனாகி
மறத்தினால் வந்து செய்த
வன்மையைப் பொறுத்தல் செய்யாய்;
முறத்தினால் புலியைக் காக்கும்
மொய்வரைக் குறப்பெண் போலத்
திறத்தினால் எளிமையாகிச்
செய்கையால் உயர்ந்து நின்றாய்''

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டம் — பாரதீய வித்யாபவன் சொற்பொழிவிலிருந்து)

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran

மற்ற வெண்மைகளை மங்க வைத்து
வியப்பளிக்கும் சாதனைக்கோர்
ஸ்கோர்—நீல டிடர்ஜெண்ட்
வில்லை. பிரகாசிக்கும் வெண்மை.
பொறிபறக்கும் வெண்மை. வெள்ளை
யினும் வெள்ளை யெனும் ஈடில்லா
வெண்மை. உங்கள் ஆடைகளுக்கு
மாசற்ற வெண்ணிறத் தோற்றம்
அளிக்க ஸ்கோர் நீல டிடர்ஜெண்ட்
வில்லை அழுக்கை அறவே கசித்து
அழிக்கிறது. ஸ்கோர் நீல
டிடர்ஜெண்ட் வில்லையால் அதிக
ஆடைகளுக்கு அதிக வெண்மை
அளியுங்கள். வண்ண ஆடை
களுக்கு பளபளப்பு கூட்டுங்கள்.

**வெற்றி கொள்ளும் வெண்மை!**

# ஸ்கோர்

**நீல டிடர்ஜெண்ட் வில்லை**




# வெற்றி கொள்ளும் வெண்மை!

FDS KSDC 3022A TAM

REGISTERED No. M. 4362
Registered as a Newspaper in Sri Lanka